உ

ஸ்ரீராமநாத ஸஹாயம்.

# ஸ்ரீ ஸேது ஸம்ஸ்தானம்,

பரீதாபி ௵

# மஹா நவராத்திரி

## மஹோத்ஸவத்தில்

---

**வித்துவான்கள்**

பாடிய பாடல்கள்.

---

மதுரை
பளிப்பு
விவேகபாநு அச்சியந்திர சாலைப்

பதிப்பு.

1913 ௵

# முகவுரை.

நீர்வளமும் நிலவளமும் பொருந்திய நம் பரதகண்டத்தில் பல புண்ணிய க்ஷேத்திரங்களும் புண்ணிய தீர்த்தங்களும் பழமையான இராஜ்யங்களும் இருப்பது யாவரும் அறிந்தவிஷயமே. அவைகளி லெல்லாம் தென்கோடியிலுள்ள சேதுஸமஸ்தானம் மிகவும் சிறப் புற்றது. எம்மதஸ்தர்களும் ஏத்திப்போற்றத்தக்கதும் எம்மாபாவ ங்களையும் தரிசனமாத்திரத்தால் போக்கத்தக்கதுமான தனுஷ்கோடி தீர்த்தம்வாய்ந்திருப்பதே இச்சிறப்புக்கு முக்கியகாரணம். கோடி தீர்த்தங்களின் மகிமை ஒன்றுசேர்ந்தாலும் இக்கோடி தீர்த்தமகிமை க்கு ஈடாகாது என்பது நம் புராணப் பிரசித்தம்.

ஸ்ரீராமேசுவரம் திருப்புல்லாணி, திருஉத்தரகோசமங்கை, திருப்பெருந்துறை, திருவாடானை, திருச்சுழியல் முதலிய பல புண் ணியக்ஷேத்திரங்களும் பலதர்மசத்திரங்களும் நிரம்பிய இந்தத்தர்ம ஸமஸ்தானத்தை ஆண்டுவரும் அரசர்களாகிய ஸேதுபதிகள் மிக்க பழமையான குலத்தைச் சார்ந்தவர்கள். விசாலமாகிய நம்தேசத் தின் பற்பல பாகங்களிலிருந்தும் பல்லாயிரக்கணக்காக ஸேதுயாத்தி ரைக்கு எழுந்தருளும் பிரயாணிகளுடைய செளகரியங்களை நன்கு கவனித்து அன்னவர்களுக்கு வேண்டியஉதவிகளைப் புரிவதான தர்ம கைங்கரியத்தையே குலவிருதாகக் கொண்ட இவ்வரசர்களுடைய பெருமை இராமேசுவரம் கோவிலைப்போய்ப் பார்க்கும் எவருக்கும் நன்குவிளங்காமலிராது.

இவ்வரசர்களுடைய வருவாயில் மூன்றில் ஒருபங்கு சத்திரம் தேவஸ்தானம் முதலிய தர்ம பரிபாலனத்துக்கென்றே ஏற்பட்டி ருக்கின்றதெனின் இச்சமஸ்தானத்தின் பெருமையைக் கூறலும் வேண்டுமோ. இதுநிற்க.

காலம் தளர்வுற்றிருக்கிற நம்தமிழ் அணங்குக்குத் தந்தையுந்தாயு மாயிருந்து அவ்வணங்கினைக் கண்ணினைக்காக்கின்ற இமையிற்காத் துவரும் தனிவள்ளல் இக்குலமன்னரேயாவர்.

இம்மாண்புள்ள வேந்தர்களது குலதேவதையாகிய ஸ்ரீ ராஜ ராஜேசுவரியம்பிகைக்கு சிருங்கேரியில் ஸ்ரீசாரதாதேவிக்கு நடக்கும் வண்ணமே நவராத்திரி உற்சவம் ஒன்பதுநாளும் பல்வித ஹோமங்க ளுடனும் அர்ச்சனைகளுடனும் பாராயணங்களுடனும் வைதிகமுறை களையனுசரித்துப் பூஜைகள் மிக்க சிறப்புடன் நடத்தப் பெற்றுவரு கின்றன.

"இம்மகோற்சவமானது முகவைமாநகரின் நாற்றிசையிலும் கோயில்கொண்டுள்ள ஐயனாருக்கும் மகாகாளிகட்கும் மகாராஜா அவ ர்கள் ஸந்நாகத்துடன் விஜயமாகி ஆண்டுதோறும் நடத்தும் களி யாட்டங்களுக்குப்பின் புரட்டாசிமாதம் சுக்லபக்ஷம் பிரதமை முத ல் நவமிவரை மிகவிமரிசையாகக் கொண்டாடப்பெற்று, விஜயதசமி யோடு முடிவுறுவதாம்." இத்தினங்களில் காலை மாலை இருபொழு தும் ஸேதுபதியவர்கள் வேதசாஸ்திர நிபுணர்களும் வித்வான்களும் உத்தியோகஸ்தர்களும் புடைசூழ வாத்தியகோஷங்களுடனும் சகல இராஜவிருதுகளுடனும் வைதிக கோலம்பூண்டு பக்திசிரத்தையுட ன் விஜயஞ்செய்து தீபாராதனை முடியும்வரை காத்திருந்து வேதப் பிராமணர்களுடைய ஆசீர்வாதங்களையும் அம்பிகையின் பிரசாதங்க ளையும் சமஸ்தானத்தைச்சார்ந்த மேற்கூறிய க்ஷேத்திரங்களின் பிர ஸாதங்களையும் திருவாலவாய் சிதம்பரம் திருச்செந்தூர் முதலிய திவ்யக்ஷேத்திரங்களின் பிரசாதங்களையும் அவ்வப் பூஜகர்கள் மூலமாகப் பெற்றுக்கொண்டபின்னர் வடமொழி தென்மொழி வித் வான்கள் சமயோசிதமாகப்பாடிய ஆசீர்வாதப்பாமாலைகளையும் ஏற் றுமகிழ்வது வழக்கம். அக்காலங்களில் அங்குக்குழுமிய எல்லோருக் கும் அந்தஸ்து முறையாக நம்மன்னர்பிரான் தாம்பூலப்பட்டி யளிக் கும் கைவண்ணத்தைக் காண்பதோர் ஒரு காட்சியாகும்.

தற்காலம் இச்சமஸ்தானாதிபதியாகிய மாட்சிமைதங்கிய ஸ்ரீ மத் ஹிரண்யகர்ப்பயாஜி ரவிகுலமுத்துவிஜயரகுநாத ராஜா முத்துரா மலிங்கநாம ஸ்ரீ ராஜ ராஜேசுவரசேதுபதியவர்கள் இத்தர்ம சமஸ்தா

ன்பாரத்தை வகித்தருளிய பின்னர் நடத்தப்பெற்ற நவராத்திரி உற்சவங்களில் இப்பரீதாபி வருஷம் நடைபெற்றது மூன்றாவது உற்சவம். முன்னிருநவராத்திரி உற்சவங்களினும் இம்மூன்றாவது உற்சவம் மிகவும் சீரும் சிறப்பும் வாய்ந்தது. அரண்மனை முழுவதும் எங்கும் பந்தல்கள் நாட்டப்பட்டு மகரதோரணங்களாலும் தொங்குமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு மிகவும் அழகாய் விளங்கியது. தூண்டாவிளக்குகளாகிய மின்சாரவிளக்குகளும் கிறுகிறுவென்றுசுழன்று மந்தமாருதம்வீசும் மின்சாரவிசிறிகளும் நிரம்பி எல்லா மண்டபங்களையும் பொலிவுறச் செய்தன. காலைமாலைகளில் அரண்மனை ஆசாரவாசலின் விசாலமான வெளியில் விளங்கும் பசும்புல்மேடைமேட்டத்தில் வாசிக்கப்பெற்ற சென்னை பாண்டுவாத்தியகோஷம் எல்லோருடைய மனத்தையும் ஆனந்தவெள்ளத்தில் அழுந்தச்செய்தது. பகலில் கீர்த்திபெற்றவித்துவான்களுடைய வித்வத்சபைப்பிரசங்கங்களும் கீதவாத்தியவிநோதங்களும் சுரோத்திரானந்தத்தை யளித்து எவரையும் பரவசமடையும்வண்ணம் செய்தன. இரவில் நாட்டியப்பெண்களின் பரதநாட்டியமும் வாத்தியங்களும் முறையே நேத்திரானந்தத்தையும் சுரோத்திரானந்தத்தையும் அளித்தன.

இவ்வாண்டில் வந்திருந்த தமிழ் வித்துவான்களின் தொகை சென்ற ஆண்டினும் அதிகம். அவ்வித்வமணிகளுள் கோஹினூரென விளங்கும் மகாமகோபாத்தியாயர் பிரமஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள் விஜயஞ்செய்து அச்சபையை அலங்கரித்தது பெருஞ்சிறப்பே.

சரஸ்வதி பூஜையன்றுமாலை ஸ்ரீமத்-சேதுபதிமகாராஜரவர்கள் சர்வாபரண பூஷிதராய்ப் பந்துவர்க்க சிநேகவர்க்கங்களுடன் ஜோதிமயமாய்விளங்கியகல்யாணமண்டபத்துக்கு விஜயஞ்செய்துதிவ்யாஸனத்தில் நடுநாயகமாக வீற்றிருந்து ஆங்குக்குழுமியிருந்த சகலவித்துவான்களுக்கும் பரிசளித்த வைபவத்தைக்காணாத கண்ணென்னகண்ணே! வேதசாஸ்திர நிபுணர்களும் ஸம்ஸ்கிருத வித்துவான்களும் தமிழ்வித்துவான்களும் ஸங்கீதவித்துவான்களும் ஆயுர்வேதநிபுணர்களும் நிறைந்த அச்சபை தேவேந்திரனது சுதன்மைபோல் விளங்கி

றது. மகாமகோபாத்தியாயர் அவர்கள் அச்சபையின்கண் பிரகஸ்பதிபகவானைபோல் விளங்கினர்! இனியசுலோகங்களாலும் செய்யுட்களாலும் லக்ஷணவித்துவான்கள் மகாராஜா அவர்களை ஆசீர்வதித்துப் பரிசுபெற்றுச்சென்ற காட்சி போஜசபையை எவர்க்கும் ஞாபகமுண்டாக்கியது. மணிகட்டிய தோடாக்களும் சாதாரணதோடாக்களும் தங்கப்பதக்கங்களும் பீதாம்பரங்களும் ரொக்கநாணயங்களும் அவரவர் வித்வத்ஸாமர்த்தியத்துக்குத் தக்கவண்ணம் பரிசளிக்கப்பட்டன. மகாமகோபாத்தியாயர் அவர்களது இருகரங்களிலும் மன்னரவர்கள் முதற்றரத்தோடாக்களை யணிந்து மிக்க விலையுயர்ந்த மகதாபி யொன்றை விரித்து அவர்கள்மெய்யில்போர்த்திச் சம்பாவனை சமர்ப்பித்த காட்சி மிகவும் ஆனந்திக்கத்தக்கதாயிருந்தது.

மறுநாள் விஜயதசமியின் முற்பகலில் மாட்சிமைதங்கிய நம் மகாராஜா அவர்கள் அம்பு எய்யும் மகோற்சவத்துக்கு எழுந்தருளிய பவனிக்காட்சி இப்பொழுதெம்மனோரால் இயம்புதற் கெளிதோ!

ஸ்வர்ணம்போல் ஜொலிக்கின்ற முகபடாத்தாலும் ரஜதமயமான அம்பாரியாலும் அலங்கரிக்கப்பெற்று ஐராவதம்போல் இறுமாந்து செல்லும் பட்டத்துயானையுடன் திக்கஜங்கள் போன்ற மற்ற யானைகளும் ஹனுமக்கொடியுடன் முன்னணியிற் செல்ல, ஒட்டகங்களும் பரிமாக்களும் பின்னணியிற் செல்ல, அவற்றையடுத்துப் பலவிதவிருதுகள் இருமருங்கும் ஒழுங்காகத்தொடர, ஸ்வர்ணஸிம்மவாகனத்தில் ஸ்ரீராஜராஜேசுவரியம்பிகையும்வேறுவாகனங்களில் இதர தேவதைகளும் வாத்தியகோஷங்களுடன் எழுந்தருளப் பின்னர் பலவர்ணஉடுப்புகள் தரித்த பல உத்தியோகஸ்தர்களும் சிநேகிதர்களும் மந்தகதியாய் நடந்துசெல்ல, அவர்பின் நாட்டியப்பெண்கள் அபிநயம் பிடித்துக்கொண்டேக, வீரர்களுக்குரிய உடுப்புதரித்துப் பரிமாமீதூர்ந்து அன்புடைய சிறியதந்தையார் அவர்களும் சகோதரரும் பந்துவர்க்கங்களும் புடைசூழ, மன்னர் அவர்கள் அப்பவனிக்கென்று பன்னூற்றுக்கணக்கான மின்சாரவிளக்குகள் அமைக்கப்பெற்று விசித்திரவேலைப்பாடுகளுடன் தகுந்த பணச்செலவில் செய்யப்பட்டுக் கண்டவர்மனமும் கண்ணும் கவர்ந்திட வனப்புவாய்ந்ததுமான கோச்சிதத்தில் சர்வாபரணபூஷிதராய் விளங்கி வீற்றிரு

க்கப் பல்லாயிரம்பிரஜைகள் நெருங்கினர் நெருங்கிப்புக்கு நீங்குமின் நீங்குமின்-என்று சொல்லிக்கொண்டு வெள்ளம்போல் நாலாபக்கங்களிலும் திரண்டுவர அப்பவனிக்காட்சி மிக்கமனோகரமா யிருந்தது. (இவ்வழகிய கோரதத்தின் படம் ஒன்று டைம்ஸ் ஆப் இந்தியாபத்திரிகையில் வெளிவந்திருக்கிறது).

மகாராஜா அவர்கள் ஒன்றரைமணி சுமாருக்கு அரண்மனைக்குத் திரும்பிவந்தநும் புராதனமண்டபமான ஸ்ரீராமலிங்கவிலாசத்தில் ஸ்ரீசேதுபீடத்தின்கண்ணே வீற்றிருந்து திவ்வியக்ஷேத்திரப்பிரஸாதங்களையும் வித்துவான்களது ஆசீர்வாதங்களையும் பந்துவர்க்கங்களுடைய வணக்கங்களையும் உத்தியோகஸ்தர் சிநேகிதர்கள் முதலியோருடைய மரியாதைகளையும் வேலைக்காரர்களுடைய வந்தனைவழிபாடுகளையும் ஏற்று நரேந்திரர்போல் விளங்கினர். இவ்வைபவங்களுடன் இப்பரிதாபியாண்டின் நவராத்திரி மகோற்சவம் பூர்ணமாயிற்று. பவனிக்காலத்திலும் கொலுவீற்றிருந்தசமயத்திலும் வருணபகவான் கருணைகூர்ந்து அந்தர்த்தியானமாயிருந்த ஆச்சரியம் எல்லோருக்கும் பெருவியப்பை யுண்டாக்கிற்று. இவ்வைபவங்களுக்கு முன்னும் பின்னும் பெய்தமழையை என்னுங்கால் பகவானுக்கு ஜீவகோடிகளிடத்தில் உள்ள அபாரகருணை நன்குவிளங்கிற்று.

இம்மகோற்சவகாலத்தில் ஸேதுவள்ளலார்மீது அவ்வச்சமயங்களில் தமிழ்வித்துவான்களா லியற்றப்பெற்ற வாழ்த்துப்பாக்களெல்லாம் ஒருங்குதொகுக்கப்பட்டுச் சென்ற ஈராண்டுகளிற்போலவே இவ்வாண்டிலும் வெளியிடப்பட்டுள்ளன. பாடியவித்வான்களின் பெயர் முதலியன இந்த நூல்அட்டவணையிற் காண்க. இச்செய்யுள்கள் இம்மகாசமஸ்தானத்தின் பழமைபெருமைகளையும் மன்னர் பிரானது கல்வித்திறமை ஈகைமுதலிய சிறப்புக்களையும் நன்குவிளக்குவதன்றிப் பிற்காலத்தவர்களுக்குச் சரித்திர சாஸனங்களாகவும் ஒருவாறு ஏற்படக்கூடியவையே. ஸம்ஸ்கிருத சுலோகங்களும் இவ்வாறே தொகுக்கப்பெற்றுச் சமீபகாலத்தில் தனிப்புத்தகமாக வெளிவரும்.

தமிழ்ப்புலவர்களுக்கெல்லாம் அதிவள்ளலாய் விளங்கும் நம்வேந்தர்பெருமானாகிய இராஜ ராஜேஸ்வர சேதுபதியவர்கள் மேதக்க கல்விசெல்வமும் தமிழ் அபிமானமும் வெற்றியும் தீர்க்காயுளும் பெற்று அரோகதிடகாத்திரராய்ப் புத்திரபௌத்திர களத்திராதிகளுடன் சமஸ்தைசுவரிய மங்களங்களும் பொருந்தியவர்களாய் நீடூழிவாழும் வண்ணம் எல்லாம் வல்ல ஈசன் இணையடியைப் பன்முறை யிறைஞ்சுவோமாக.

"திங்கண்மும் மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோ
ன்னினி தரச னாள்க நாடெலாம் விளைக மற்றும்
எங்குள வறத்தி னோரு மினிதூழி வாழ்க வெங்கள்
புங்கவன் பயின்ற நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே"

எஸ். சாமிநாதையர்.

# அட்டவணை.



உ

ஸ்ரீராமநாத ஸஹாயம்.

ஸ்ரீ ஸேதுஸம்ஸ்தானம் பரீதாபி ௵ மஹாநவராத்திரி

# மஹோத்ஸவ வாழ்த்துக்கவிகள்.



சென்னை பிரஸிடென்ஸிகாலேஜ் மஹாமஹோபாத்யாயர் ப்ருஹ்மஸ்ரீ

வே. சாமிநாத ஐயர் அவர்கள் இயற்றியவை.



திங்களணி சடைப்பெருமா னிடப்பாகம்
பிரியாத தேவி நான்மு
கங்களுடை யவன்முதலோர் யாவரையும்யா
வையும்புரக்குங் கருணைச் செல்வி
எங்கடமிழ்க் கிறைராஜ ராஜமணி
பால வள்ள லெந்த ஞான்று
மங்களயா வையுமேவி மேன்மேலு
மகிழவருள் வழங்கு வாயே. (1)

தோப்படைத்த வைளர்குலம் சவட்டியம
ரனைப்புரந்த கருணைச் செல்வி
தேப்படைத்த தமிழ்ப்புலவர் வடமொழிவா
ணர்களிசை நாம் செல்வர் முன்னோர்
யாம்படைத்த நிதியென்று நவின்முத்து
ராமலிங்க இறைவன் றன்னை
ஓப்படைசெய் தருள்கவொரு விகற்பமொரு
குறையேனு முறாமல் மன்னே. உ (2)

புண்ணிய சேது பதிவண்மைப் பாற்கர பூபதிமுன்
பண்ணிய புண்ணிய மென்னவந் தோன்றமிழ்ப் பாவலருக்
கண்ணிய தேவ தருராச ராச அரசர்பிரான்
எண்ணிய யாவும்பெற் றின்புற்று வாழ்க இருநிலத்தே. (3)

ஸேதுஸம்ஸ்தான வித்வான்
ரா. இராகவையங்கார் அவர்கள் இயற்றியவை.

பூதலாதிபதி யாயசேதுபதி புண்ணியன் உயர் கெண்ணியன்
முல்லைக் கண்ணியன்—புவிப்
புறத்துளாறுமந் நயத்துலாவுபுய
பூதரன் ஜய ஸ்ரீதரன்
நாதகீதமலி ராமநாதபுர நாயகன் முறைவி தாயகன்
ஒரு தாயகன்—தமிழ்
நயத்துக்கியுமதி சயத்துக்காயகொடை
நாடினன் இசை சூடினன்;
மாதயாநிதிகு மாரிமாயைசிவ பாரியை அருள் வாரியை
யுமை நாரியை—நிதம்
மனத்து வைத்துநனி கனத்தபத்தியொடு
வாழ்த்துவோன் பகை தாழ்த்துவோன்
ஏதமேயகுடை ராஜராஜனணி தேவையன் திவ்ய ஸேவையன்
மலர்ப் பாவையன்—அவன்
திருச்செங்கோ லரசு மிகச்சங்கர்ழியுல
கூழியேய் வரை வாழியே. (1)

ராம நாதபுர மாராஜ ஸேதுபதி ஸ்ராஜ ராஜ மகிபா
தேவாதி தேவனெனு மாராம நாதனருள் சேர்வீர சூரர் திலகா
தீரா விசாலகரு ணாஸாக ராவிஜய ஸேனா ஸமூக நிருபா
தேவார மோதுதிரு வாடானை மாசுழியல் சீரான தேவை நகராய்
பாரார் விலாழிமத மாமேனு லாவுபர காலா நிலாவு குடையாய்
காதோடு வேல்விழியர் காமா தயாளகுண சோமா பராவு மிசை
நாரார் புயாசலகு மாரா குணாலயவு தாரா குபேர நிதியாய் [யாய்
தானுதி காசமர கோலாக லாதிபர தாவாழி யூழி பலவே. (2)

பூம னாதியர் தேவர் நராதிபர் பூசுராதி தபோதனர் யாவரும்
பூச லார்பவ மோசன மாவது போதவே தொழு சேது தராபதி
ராம னாகிய மேனி மனோகரன் காதல்கூர்தமி ழாகரர் பாடிய
காவை யேநிகர் காவல னாவலன் காவி கேதன மாகமு லாவரும்

நாம நாத புராதிப னீதியன் ராஜராஜே வசீகர சீதரன்
ராஜ ரீகம தேமொடி தாழிநி லாவ வேயருள் கூர்வை பராபரை
யாமளாதி புராதன நாமித யாப ரீபரி பூரணி காரணி
யாக வேதிய ராகுதி யோடிசை ஞான வாரிதி நாரணி தேவியே.

ஒரு வெண்பாவுள்மூன்று வெண்பா.

திருவால் வாழ் விங்குசேர் சீரா ரிசையாற்
செருவேனோர் தங்குமா தீரா—தருவான
செங்கையாய் சேரார்ச் செகுமுத்து ராமலிங்கச்
சிங்கமே மாரா திகழ். (4)

இங்குசேர் சீரா ரிசையாற் செருவேனோர்
தங்குமா தீரா தருவான—செங்கையாய்
சேரார்ச் செகுமுத்து ராமலிங்கச் சிங்கமே
மாரா திகழ்திருவால் வாழ்வு.

சீரா ரிசையாற் செருவேனோர் தங்குமா
தீரா. தருவான செங்கையாய்—சேரார்ச்
செகுமுத்து ராமலிங்கச் சிங்கமே மாரா
திகழ்திருவால் வாழ்விங்கு சேர்.

அவியுடை யாரிந் திரனாதி தேவ ரளக்கரிய
சவியுடை யார்சந் திரசூ ரியர்சுவை தந்தமிழ்தாங்
கவியுடை யார்செந் தமிழோ ரவர்தங் கவித்திறந்தேர்
செவியுடை யானங்கண் மாராச ராச சிகாமணியே. (5)

விண்ணிய னாட்டின னிந்திரன் யாரும் வெலற்கரிய
திண்ணிய நாட்டினன் ஜார்ஜ நராதிபன் சீர்த்தவளம்
நண்ணிய நாட்டின னேபாள பூபதி நாற்றிசைக்கும்
புண்ணிய நாட்டினன் மாராச ராச புரந்தரனே. (6)

அவியி னுணவிற் புலவோ ரிரப்ப தளிப்பதன்றிப்
புவியி னுரிமைகொள் மாராச ராச புனிதனைப்போற்
செவியி னுணவிற் புலவோர்க் களித்தவர் செப்புநறுங்
கவியி னருமை தெரியுங்கொ லோகொண்டைக் கற்பகமே. (7)

மகங்கண்டு பொங்கும் பெரும்புயல் பத்தி வடிவுகொண்ட
அகங்கண்டு பொங்கு மிறையோ னருண்மழை யார்ந்தவள
நகங்கண்டு பொங்கு மயில்ராச ராச னறியமதி
முகங்கண்டு பொங்குந் தமிழா மமிழ்த மொழிக்கடலே. (8)

உண்டாற் பறக்கும் பசித்துயர் தெய்வத்தி னோர்பெயரும்
விண்டாற் பறக்கும் வினைத்திடர் நாளும் விழுப்பொறையே
கொண்டாற் பறக்குஞ் சினம்ராச ராசன் குளிர்முகத்தைக்
கண்டாற் பறக்குந் தமிழ்க்கவி வாணர் கலித்தொடரே. (9)

காந்தர்க்குள் மிக்கவன் கந்தர்ப்பன் றெய்வக் கவிப்புலமை
மாந்தர்க்குள் மிக்கவன் சிர்க்கம்ப நாடன் மதுரகுண
சாந்தர்க்குள் மிக்கவன் வாடாத் தருமன் றமிழறியும்
வேந்தர்க்குள் மிக்கவன் சிராச ராச விதரணனே. (10)

புந்தியிற் பெரியர் குழுமிய முகவைப் புராதிப னிராசரா சேசன்
அந்தணர்க் கினிய புலவருக் கிசையி னறிஞருக் கணிதுகி னிதியித்
திந்திரற் கனைய னெனவுவந் திருக்கு மித்திரு வோலக்க மாட்சி
மந்திரச் சுருதி யுமையருள் காப்ப மன்னிநீ டூழிவா ழியவே. (11)

எருதுகட்டுத் திருவிழாவிற் பாடியவை.

உகவை கூரக் கோட்டு மாமிசை
யுலகு காணத் தோற்றி மாமுழ
வொலியின் வாழிப் பாட்டு மேவர—ராஜராஜன்

முகவை மேலைக் கோட்டை வாயில்கொள்
முதிய சூரிச் சாத்த னார்பதம்
முறைவ ழாமற் போற்றி யேதொழூ—தானந்தமே

மகவை யேவைத் தூட்டு தாய்நிகர்
மலழகு லாவக் கோட்டு நீள்குளம்
வழிய நீரிற் பாய்ச்ச லாலுயர்—சேதுநாடு

தகவை மேவிக் காய்த்து மாநிதி
சகல லோகத் தேற்ற மாவரல்
நிலைமை யாகக் காட்டு மாஙிது—வாய்மையாமே. (12)

பூரணை புட்கலை யார்தழு வித்திகழ் பூரண வற்பினனே
பூமி மிசைக்குடி காவ லினைப்புரி பூத கணத்தவனே
நாரண னுக்கர னானவ னுக்கொரு நாளி லுதித்தவனே
நாடு செழிப்புற வான மழைத்திரள் நாடி விளைப்பவனே
ஏரண வப்பெறு மானின வர்க்கமும் யாவு மளிப்பவனே
ஈதி யெனைத்துமி லாமல்மு லைப்பயி ரேற வளர்ப்பவனே
பாரண நற்றவர் வாழ்முக வைக்குட பாலுறை யற்புதநின்
பாத மலர்த்துணை யாதர விற்பணி சேது பதிக்கருளே.

சிவகங்கை வித்வான்

பெரியசாமித்தேவர் அவர்கள் இயற்றியவை.

5 உலகம் யாவு முணர்வரு மைந்தொழிற்
குரிய சங்கரற் கோர்துணை யாகுமத்
தலைவி பார்ப்பதி ராஜரா ஜேஸ்வரி
தாள்வ ணங்குறும் ராஜரா ஜேஸ்வரன்
இலகுபாநு வழிவழித் தோன்றலென்
றென்றுவாரி யெடுத்தலைக் கைகளின்
அலகில் முத்த மளித்திடும் வீரையான்
அணிகொள் சேது பதியர சோங்கவே. (1)

6 வானவர் தானவர் மானவர் எவரும்
வரங்கள் பெறநே ரிரங்கு மனையாம்
ஈனமி லீஸ்வரி பார்வதி தாளிணை
இறைஞ்சல் புரிவாம் நிறைஞ்ச மனதால்
கானமர் தாமரை மீதுறை மாநிகர்
கரும்பு மொழியார் விரும்பு புயமேல்
தேனமர் மாலைகொள் ராஜரா ஜேஸ்வரன்
சிறந்து வளர்வான் புரந்தி வுலகே. (2)

MAHAMAHOPADHYAYA ... LIBRARY

வண்டுவிழி கண்டமுத முண்டமொழி
விண்டுகுழன் மயிலனைய சாயல் வரிவில்
வாங்குபுரு வந்துண்ட மாங்குயி லிலங்குமா
மரைமலரை வென்ற வதனம்
கொண்டவந் தரியமலை விமலைநா ரணிகவுரி
கொற்றவை விளங்கு காமக்
கோடிமர கதவல்லி ராஜரா ஜேசுவரி
கூறுவின் னப்ப மதுகேள்
மண்டமரில் வென்றுவெங் கண்டுவரு படையினுள்
மகிதலம் புகழ்ந டையினன்
மாருத பத்திபான் மத்தமத வத்தியான்
மனுபுத்தி சேருத் தியான்
பண்டைமனு வெனுமுத்து ராமலிங் கச்சேது
பதிமக்கள் கிளைஞ ருடனே
பல்கிளை டூழிதீர்க் காயுளைப் பெற்றிடப்
பாலிப்பை நீகிரு பையே. (3)

முத்தமிழ்சேர் முந்நாட்டு மூவையினும் முன்னாட்டு முதனியென்றவ்
வுத்தமன்போ லுத்தமனே நின்னாட்டிற் கறிவுடையோ ருகித்தந்நாள்
வைத்தபெயர் நன்முகவை மாபுதுவை தேவைவண்மூ வைசேரிப்ப
தித்தலத்து தித்தமுத்து ராமலிங்க சேதுபதி செயசிம் மேறே. (4)

கோட்டிற் சிறந்தது பாரதந் தீட்டிய கோடியர்ந்த
பாட்டிற் சிறந்தது மாணிக்க வாசகர் பாபலவாங்
தேட்டிற் சிறந்தது செந்தமிழ்த் தேர்ச்சிகற் சீர்பெருகும்
நாட்டிற் சிறந்தது சீராஜ ராஜனன் னுடதுவே. (5)

எல்லிற் சிறந்தவ னேம்பரி யோனிக லேற்றுடற்றும்
மல்லிற் சிறந்தவன் மாருத மைந்தன் வலிகொள்வரி
வில்லிற் சிறந்தவன் கோதண்ட பாணி விளங்குறுநிச்
சொல்லிற் சிறந்தவன் சீராஜ ராஜ துரந்தரனே. (6)

பொன்னிக்கும் வெண்கோட்டுப் பூமகளுக் கும்பிடமாய்
மன்னிக்கும் பற்கும் மகபதிக்கும்—சென்னிக்கும்
பார்ப்பதின்மிக் காவல் பதியவனர் தேவையெனும்
பார்ப்பதிகற் சேது பதி. (7)

இராமநாதபுரம் வித்வான்

மு. இராகவையங்காரவர்கள் பாடியவை.

பூமிக்கு ளிந்த்ர புரமாமி குந்த புகழ்மேவி நின்ற முகவா
புரியாதி சேது பதிராஜ னீடு புலமோ டிலங்கு கலையான்
நாமிக்கு யர்ந்த கவிவாணர் தங்கள் நலமா விளங்கு குலவான்
நனிபாயும் வைகை நதியாளன் வாழ நமையாளு கின்ற கனமயான்
மாமிக்க செம்பி வளநாடு பொங்க மகிழ்வோடு வந்து னடிமேல்
மஹராஜ ராஜ மகிபால னுளில் மதுவாட லின்று செயுமால்
தேமிக்க நின்ற னருளான் மகிழ்ந்து செயவாழ்வு தந்த ருளுவாய்
திருராம நாத புரமே வடாது திகழ்நீல கண்டி யுமையே. (1)

பாவாணர் தங்கற் பகமனை யானிப் படியிலுறுந்
தேவா னவனெனுஞ் சீராஜ ராஜன் சிறப்பினொடு
காவாழு நின்னடி கைதொழு வானைக் கனிந்தருள்வாய்
கோவார் முகவை வடதிசை மேவிய கோமளமே. (2)

மாமண்ட லாதிபர்கள் தாமண்டி யேபணியு
மாநின்ற வுரயி லாளன்
மறுவற்ற மாபரிதி வழியுற்ற சேதுகுல
மகிழ்பெற்று வாழ வருவோன்
தேமண்டு தேவைநகர் மாவண்ட ரீசனடி
தேர்தொண்டு பூணு நீதன்
திருவுற்று லாயவருள் கலைபெற்று மேவுமதி
திகழ்வுற்ற நீள்கொ டையினன்
நாமண்டு மாகவிஞர் பாவுண்டு நாளுமுயர்
நாமங்கொள் ராஜ ராஜன்
நலமிக்க வாயுளொடு பலமிக்கு நீதிமுறை
நயமிக்கு வாழ வருள்வாய்
கோமண்ட லீகர்பணி சாமுண்டி தேவிபரை
கோதண்ட நீலி சூலி
குறைவற்ற சேதுபதி நிறைவுற்று வாழுமனை
குடிபெற்ற ஆதி யுமையே. (3)

இலங்கார மார்புடை யான்ராம நாதனை யேத்திநிதந்
தலங்காவல் செய்கின்ற சீராஜ ராஜன் தரணிபுகழ்
அலங்கார மார ணடிதொழு வாற்குன் னருள்பொழிவாய்
குலங்காவல் செய்தவர் கோலோங்க ஓங்குங் குலவிளக்கே. (4)

13 நாடும் பொருளு நனியுவந் தீந்துநன் னாவலரை
வீடும் விளக்கும் விளங்கவைப் போனுன் விரைமலர்த்தாள்
பாடும் பெருமையன் சீராஜ ராஜனைப் பாலித்தருள்
தேடும் முகவைத் திரவிய மாகிய தெய்வதமே. (5)

14 பூலக்க மாகிய பொன்னுடை நாவலர் போந்துகொளச்
சாலக் கருமுகில் போற்பொழி பாற்கர சாமிபெற்ற
சீலக் குமரன் திருராஜ ராஜன் திகழ்தருமிவ்
ஓலக்கங் காண்டற்கு வேண்டத் தருங்கண்க ளோலக்கமே. (6)

15 தேக்கிய கல்வியு மீகையு மன்புடன் சீலமுந்தன்
கோக்குண மாக்கொண்ட கொற்றவன் காணிக் குவலயத்தே
ஆக்கிய வண்புகழ்ப் பாற்கர வேந்தற் கமைந்தசிவ
பாக்கிய நல்க வருராஜராஜ பவித்திரனே. (7)

16 தேடிய செந்தமிழ்ச் செல்வந் திகழ்கின்ற சீலர்தமை
நாடி யளிக்கின்ற நற்றமிழ் வேந்தனிஞ் ஞாலமிசை
கூடிய சேது பதிராஜ ராஜன் குலவுதனுக்
கோடி யளிக்கின்ற கோமா னிரவி குலாதிபனே. (8)

17 சாதுக்கள் வாழ்தரு செம்பிநன் னாடு தழையவிண்ணோர்
மாதுக்கம் நீக்கிய மாதே அருளுக வண்கவிக்கெப்
போதுக்கும் நல்லவன் பாற்கர பூபதி புண்ணியத்தாற்
சேதுக்கு வாய்த்த பிரான்ராஜ ராஜ சிகாமணிக்கே. (9)

18 வேலிக்கு ணின்ற பயிரொன்ன வேயிவ் வியனுலகம்
பாலிக்கும் சேது பதிராஜ ராஜனைப் பாக்கியஞ்சேர்
தாலிக்கு வேலியை நீடூழி வாழத் தயைபுரிவாய்
நீலிக் குமரி நிரதிச யானந்த நின்மலையே. (10)

மன்னார்குடி காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

## சர்க்கரை-இராமசாமிப்புலவர் அவர்கள் இயற்றியவை.

பூமேவு திருமகடன் மருமகளொ டதிநண்பு பூண்டுறையும் ராமநாத
புரமருவு மிரவிகுல நிருபரண் மனையிடைப் பொற்கோவில் கொண்டதேவி
புராதனி யபராவணி புராந்தக னிடத்தமர் பொருப்பரைய னீன்ற குமரி
பூரணி சதாநந்தி யாரணி பராசத்தி பொருவின்மகி டாசுரனைமுன்
தீமேவு சூலத்தி னூற்பிளந் துலகெலாஞ் செங்கோல் செழித்து வளரச்
செய்தபக வதிகவுரி யையைசண் டிகைநீலி சிங்கவா கினிசுந்தரி
திருமாலினுக்கிளையநங்கைகொற்றவை விமலை செயமருவு மெண்டோளிகாத்
தியாயனி யிராஜரா ஜேசுவரி தாமரைச் சேவடியை யஞ்சலிப்பாம்
தேமேவு தென்றல்வரு வெற்பினான் சைவநெறிதேற்றிவரு வைகைநதியான்
செந்நெல்முப்போகம்விளைசெம்பிவளநாட்டினான் செம்பொனிறைமுகவைநக
தீந்தமிழ்ப் பாமாலை யேந்துபுய மேருவிற் சீர்த்தியெனவிர் தளவினான் [ரான்
சிந்தையென வந்திதென முந்துவாம் பரியினான் சிறுகட் பெருந்தந்தியான்
மாமேவு மும்முரசு மதிர்முன்றி லான்கவி வினைந்தகரு டக்கொ டியினான்
மன்னுயி ரனைத்தையுந் தன்னுயி ரெனக்காத்து மகிழ்வுதரு செங்கோலினான்
மதிபிதழி முடிசூடு ராமநா தன்பாத மலரைமற வாத வள்ளல்
மகிபாலர் பணிமுத்து ராமலிங் கச்சேது மன்னனைக் காக்க வென்றே. (1)

புவிக்குத் திலத மெனுஞ்சேது பூபதி பொன்னையள் ளிக்
கவிக்குச் சொரிபுட் கலாவர்த்த மாமுகில் காவலர்கள்
குவிக்கத் திறைகள் கைக் கொண்டெந்த நாளுங் குவலபத்தோர்
செவிக்குப் புகழளிப் பான்ராஜ ராஜ சிகாமணியே. (2)

பூதனம் வாசி புலவோர்க் களித்துப் புகழ்பெறுசிம்
மாதனன் வைகை வளநாட னின்றுள் வணங்குகந்த
மாதன னெங்கள் மகராஜ ராஜன் வளரறும
கேதனன் வாழ வருள்ராஜ ராஜகிர் பாகரியே. (3)

---

சென்னைத் தமிழ்ப்பண்டிதர்

## அனந்தராமையர் அவர்கள் இயற்றியவை.

புயலிசையு மீகையாய் முகவைமுத்து ராமலிங்க பூபா நின்றன்
அயலிசையு முற்றவரே முற்றவர்கள் அவரின்மை அளப்பார் யாரே
இயலிசைநா டகத்தினராய் முத்தமிழ்தத் தின்புற்றார் இந்த இன்பிற்
பயலிசையு மென்பாரோ போகியாள் நாகத்தும் பண்பாய்ந்தோரே.

பூமினு ளேத்துமுக மாகவே சாற்றலொளிர்
பூவினா மேற்குமுக வையின்வாழ்வே
பூரணீ தோற்றுலக காரணீ சீர்க்கவுரி
போதினோர் காட்டிரு பதமானே
ஏமமே யாக்குபுவி மேவுமா நோக்கியரு
ளீறிலா வாற்றலுள வுமையாளே
யாளிமா னேற்றின்வரு காளிமா ருக்கருணை
ராசரா சேச்சுவரி யெனுமாயே
சாமனூர் மூத்தவனு மேரினோர் தோற்கமகி
தாயினான் மாத்திறலி னவனாகத்
தானுறா மாச்சுகுண ராசரா சாக்கியைகொ
டார்மன்மா பாற்கரம னருள்பாலன்
வாமமார் கீர்த்தியறி வீகைமா வூக்கம்வலி
மாசிலா வாற்றல்சுக மிகுவீரம்
வாழுநா ளேற்றமுயர் வாணிநா வேற்றமிவை
மாகம்வாழ் கோச்சிவனை வருள்வாயே. (2)

புலத்துறை முற்று மறிஞர்க டொகுத்த
போக்கறு பனுவல்கள் பயின்று
நிலத்துறை யுயிர்க்கு வேண்டுநன்
றாற்றி நிகரறு வண்டமிழ் வளர்த்துக்
குலத்துறை பெருக நல்லறம் புரிந்து
குடிபுகழ் கோலினு னாகி
நலத்துறை ராச ராசவேள் சேது
நரபதி வாழ்கபல் லாண்டே. (3)

மதுரையிலிருக்கும் வித்வான்
சுந்தரேஶ்வர ஐயரவர்கள் இயற்றியன.

உலகுபுகழ் தருபனிய வரையிறையு மதிமரபு
முயரவொரு தநயையென வருளல வாரணிவிண்
ணுறையமரர் பணிசரண கமலவள முகவையர
சுறையுளொளி வளரவருள் கொடுவாழு நாரணிபண்

ணிலிகுதவ நெறிபிறழ வொழுகுமது கயிடவர்க
ளிரியவமர் பொருதசய மிகுவீர பூரணிமுன்
னெழுவகைய வுலகுயிர்க டமையருள் பொழியுமனை
எழுதரிய திருமறைக ளடிதேடு காரணிசொல்
அலகில்கலை யுணருநவ ரசபரித பருணிதர்க
ளநுதினமு முறைசெய்தணி கவிமாலை சூடிபயன்
அணியியைய மொடுருமரி வரையுமுள வெவருமுற
னுணுகிவர மடைபுநித மிகுசேது காவலவர்
திலகமென வருகுரிசில் புலவர்மகிழ் தருபரிசில்
தினமுதவு கநகமுகி லெனும்ராஜ ராஜதுரை
திருவுமெழி லுருவுமனை மகவுமுள சுகமுநல
செயமுமுத முறவருள்க வவனீடு வாழ்கெனவே. (1)

பூதத் தொகையு மிருசுடரும் பொன்று முயிரும் வடிவான
புரிசெஞ் சடையான் மனமலரிற் பொருந்துமனமே யநுதினமும்
போதக்கொண்டருளக்குகையிற்பொலியும் விளக்கே தமிழ்வேந்தர்
புநித மரபு தழையவருள் பொழியு முகிலே முகவையினிற்
சேதுத் தலைவர் நவநிசியிற் செய்யும் பூசை மகிழ்ந்தேற்றுத்
திகழ்பல் பலனு மினிதருளும் தெய்வ மணியே திரிபுரையே
பாதத் தொழும்பு பூண்டுநினைப் பணிசீ ராஜராஜ வள்ளல்
பற்பல் லூழி வாழவுளம் பரிந்து கருணை புரிந்தருளே. (2)

கட்டளைக் கலித்துறை.

பரிசைப் பகிர்ந்திடு மன்னரு ளார்பலர் பாவலர்க்கு
வரிசைப் படலைப் போலெவர் நல்குவர் மாநிலத்திற்
றரிசைத் தெறுதனுக் கோடிக் கதிபதன் றுரையவர்
புரிசைக்குள் வைத்துவெல் மாராச ராச புரவலனே. (3)

கொடுக்கக்குன் றுதன மாநிதி மேக மெழுந்துநிதம்
மடுக்கக்குன் றுதது வார்கடல் மெய்யருண் மன்னியவ
ரடுக்கக்குன் றுதது வீட்டின்பந் தன்னை யடைந்தவர்க்குக்
கொடுக்கக்குன் றுதவன் மாராசராச குலோத்துங்கனே. (4)

முத்தந் தருசேது காவலன் பாவலர் முத்தமிழ்க்கு
வித்தந் தருதரு நேர்கரத் தானுன் விரைமலர்த்தாள்
சித்தந் திகழ்தரு மாராஜ ராஜன செயம்பெறவே
நித்தம் புரந்தருள் வாய்முக வாபுரி நின்மலையே. (5)

## திருவாரூர் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் சந்தானையயங்காரவர்கள் பாடியவை.

2 பூந்தண் மலர்க்கற் பகநாட்டிப் புனித வமரா பதிபோந்து
புலவர் வறுமைப் பிணிதீர்த்துப் பொலிந்த தனைய வளமுகவை
வேந்தர் பெருமான் சேதுபதி விஜயத் தமிழிற் கெழிலியனுன்
விந்தையுறையுந் தடந்தோளான் விரும்பு முத்து ராமலிங்க
சாந்த குணவான் எலாநலமுந் தழைத்துவாழ அருளுதியால்
சந்த மறைகள் தொடர்வரிய தனிமாஞான நெறிநடந்து
சேந்தவடித்தா மரையுடைய தேவி யுமைமா தங்கிபரை
திருமாற் கினிய சோதரியாய்த் திகழுமாதி காரணியே.

4 இருவே றுலகத் தியற்கையெனுங்குறளுக்கெதிராயெழுந்திலங்கும்
பருகேர் வளனும் பலகலையும் பலமாப் படைத்த பாக்கியவான்
முருகேர் முத்து ராமலிங்க மொய்ம்பன் நீடு வாழ வுமை
இருபோ தனைய சேவடிகள் எப்போதினும்யா மிறைஞ்சுதுமே.

5 அன்பெலாமாதிபராபரைபதத்தாமரைமலர்க்கமைத்துநற்றமிழோர்
துன்பெலாந்தீர்க்குஞ்சுரதருவென்றுசொல்லியற்புலவர்பாத்தொடுத்தி
கின்பெலாமியையுமுளத்திலேடணியும்ராஜராஜேசமாலென்றுங்[ங்
கொன்புலால்வேற்கைக்குமரனேநிகர்ப்பக்குவலயத்தூழிவாழியவே.

---

### இராமநாதபுரம் வக்கீல்
### N. V. சுந்தரராஜ ஐயரவர்கள், B. A. L. T. பாடியவை.

15 பூதலத் திறையுட் புனிதமா சேதுப்
புனல்படி பவர்தமைப் புரக்கும்
பொற்புறு மரசும் பொருணிறை கலையும்
போதமு மேதகு பதமும்
ஈதலுந் தமநற் குணமுநன் கிலங்கு
மெழின்முத்து ராமலிங் கேந்த்ரன்
இயலிசைக் கலைபி னிங்கித முணர்ந்தோன்
இன்றமிழ்ப் பாவலர் தினமும்

## மஹாநவராத்திரி வாழ்த்துக்கவிகள்.

காதலுற் றடையுங் கடிநகர் முகவை
காவலன் கற்பகக் கரத்தோன்
கருதுபன் னலமும் வாழ்வுமென் மேலும்
கைக்கொளக் கருணைநீ யருள்வாய்
பாதல முதலாப் புவனமீ ரேழும்
படைத்தளித் தவந்திடுந் தாயே
பன்னருஞ் சேது பதிகுலத் தரணே
பாரெலாம் பரவுமுத் தமியே. (1)

---

மதுரை சேதுபதி ஹைஸ்கூல்

### எஸ். சாமிநாத ஐயரவர்கள் இயற்றியவை.

பூம லிந்தபொழி லூடு லாவியிசை புள்ளி னங்களொலி முகவைமன்
புண்ய சாலிரகு நாத சேதுபதி புகழி ரண்யகர்ப்ப யாஜிவேள்
சாம கானமகிழ் ராம நாதனுறை சங்க முத்தமிகு தீவினில்
சனம் வசித் திடவொர் ஊர்படைத்துல குசாலசீர்புகழ்படைத்தவ
னேம வேலனவ னண்ணி யூர்கள்மறை நாவ லர்க்குதனி நல்கினோன்
நளின வாவிவன சங்கரீ யுனது நல்ல கோயிலையு நாடினோன்
வாம பாகமமர் வாணி நீயருளும் வண்குலத்துவழி வந்தவன்
வள்ள லானதிரு ராஜ ராஜனெடு வாழ்வு மேவவருள்வாயரோ.

நடையினிற் சிறந்து நம்பனும் ராம நாதனைத் துதித்தலே நங்கள்
கடனெனப் பிடித்த கார்க்கடற் சேது காவலன் கரந்தையர் கோமான்
கொடையினிற் சிறந்த பாற்கரன் குமரன் கோவினன் னின்னருள்கொள்ளத்
தொடையினிற் சிறந்த தோளனைக் காப்பாய் தொல்வன சங்கரி யம்மே.

புவிபுகழ் சேதுவின் பொற்புறு காவலன் புண்ணியவான்
கவிபுகழ் நாவலன் கானவி னோதனுங் காட்சிபெறத்
திவிவன சங்கரி சீர்மிகு தேவிநிற் சேவித்திடும்
ரவிகுல மன்னவன் ராஜரா ஜேசனை ரட்சிப்பையே. (3)

பூமாலை சூட்டிப் புகழ்ராஜ ராஜனெம் பூபதிவேள்
பாமாலை சாத்திப் பகவதி யுன்னைப் பராவினன்காண்
தேமாலை முல்லை திகழ்மார்பன் தேவை நகருடைய
சீமா னவன்றன் செழுங்குல மோங்கிடச் செய்தருளே. (4)

மைதீர் நலங்கள் நிறைமுக வாபுரி மாநகரைக்
கைசேர்ந் தளிக்கின்ற காவலன் வீரக் கழலுடையோன்
பொய்தீர் புலவர் பொழிகவிக் கேமணிப் பொற்கடகம்
பெய்தே யுவக்கின்ற ஸ்ரீராஜ ராஜன் பிறங்குகவே. (5)

ஆசிரியவிருத்தம்.

பாருற்ற மானிடவர் பவமெலாம் போக்குநற்
பரிசுத்த சேது மன்னன்
பண்பான கிளைஞரொடு பாவலர்க ளன்பர்மிகு
பரிசனம் சூழ்ந்து சென்று
சீருற்ற கங்கையுறு திருவேணி சங்கமஞ்
சிவலிங்க மார்நருமதை
செழும்புனற் காவேரி பெரியகோ தாவிரி
செம்பொருநை நதிக ளாடித்
தாருற்ற முல்லையான் தர்மபரி பாலகன்
தண்டமிழ்க் கலைவி னோதன்
தரணிபுகழ் காசிபிர யாகைதிரு மால்கயை
தருபஞ்ச வடிய யோத்தி
காருற்ற கண்ணனுறை மதுரைப்ருந் தாவனம்
கவின்மும்பை காளி கட்டம்
கண்டுவரு ஸ்ரீராஜ ராஜருக்கு பூமனைக்
காத்தருள்க தேவி யுமையே. (6)

வெண்பா.

பூபாலா பொற்கழலாய் பூங்காவிச் செங்குடையாய்
கோபால தூதன் கொடியுடையாய்—மாபாவம்
போக்குமா சேதுப் புனலுடையாய் புண்ணியனே
ஊக்கமாய் வாழ்க உவந்து. (7)

கட்டளைக் கலித்துறை.

புள்ளுக் குகந்த கரநீல கண்டி புகழ்மிகுத்தேதாய்
வெள்ளிக் கிழமை விருப்போடு வந்துன் விரைமலர்த்தாள்
வள்ளற் குணத்து வளராஜ ராஜன் வழுத்தினன்காண்
பிள்ளைக் களிப்பது பெற்றவள் தேடிப் பெரும்பயனே. (8)

புகழ்திரு கல்வி ஞானம் புண்ணியச் செயலில் ஊக்கம்
அகமகிழ் வொழுக்கம் வீரம் அன்புறு மக்கட் பேறு
திகழ்தர ராஜராஜ சேதுபூ பாலன் பெற்றே
மகபதி தனதர் போல வாழ்கபல் லாண்டு மாதோ. (9)

வெண்பா.

எருறுகட்டுக் கேகி யெழில்பெறவெம் மன்னன்
பருதிமகிழ் பாலன் பவனி—விருதுபல
சூழ்ந்துவருங் கோலத்தைச் சொல்லல் அரிதம்மா
வாழ்கவவன் நாளும் மகிழ்ந்து. (10)

---

இராமநாதபுரம் மஹாராஜாஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
திருஞானசம்பந்தக் கவிராயர் இயற்றியவை.

# இராஜராஜேசுவரி இரட்டைமணிமாலை,

உலகமெலாம் போற்றும் ஒருமுதல்வன் றேவி
அலகிலுல கீன்றருளும் அன்னை—நலகருணைச்
சீராஜ ராஜேச் வரியுன் திருப்பெயர்கொள்
மாராஜன் வாழ்வுறநீ வா. (1)

வாவுங் கலையிவர்ந் தேசிங்க மீதுறு மாதரிநின்
மாவுங் கலைமக ளுந்தொழும் பாத மருமலர்க்கே
மேவுங் கலைகொளுஞ் சிந்தைய னாந்தரு மேகநிதி
யாவுங் கவிகரச் சீராஜ ராஜனை யாட்கொள்வையே. (2)

ஆண்டா யருளுருவே யம்பிகையே நின்பெயர்தான்
பூண்டா னுனதடிமைப் பூபாலன்—ஈண்டு
புகழ்ராஜ ராஜனெனப் பொற்பினொடும் போதம்
திகழ்வாக வந்தருணீ செய். (3)

செய்யுறுஞ் சங்கக ழூடே குலாவியிஞ் சிச்சிகரத்
தையுறுங் கற்பகக் காமீ துலாவுறுங் கண்முகவை
செய்யுறுஞ் சங்க மிகச்செய்தி ராஜரா ஜேசனெனுந்
துய்யசந் தன்பெறும் பேறே திரிபுர சுந்தரியே. (4)

சுந்தரியே ராஜரா ஜேசன் றுதிபெறுசீர்
அந்தரியே யீசனகத் தாரொளியே—சந்தரசக்
கானவியே தன்கருணைக் கண்ணன் கவினுருமுக்
தானவியே தன்றனகத் தண். (5)

தண்ணந் தளவணி பாற்கர பூபதி தந்தமைந்தன்
எண்ணம் புனிதன் புவிராஜ ராஜன் இலங்குமெழில்
வண்ணந் தனதெனக் கொண்டா னுனைத்தினம் வாழ்த்துமுயர்
புண்யன் பெறுவர மெல்லா முவந்தருள் பூரணியே. (6)

பூரணை தன் கேள்வனொடும் பொற்பாரு நீலகண்டி
ஆரணியோர் மாமாரி யம்மையுடன்—சூரியருள்
பாயவன சங்கரியும் பற்றுநக ராண்டருளும்
சேயனையான் வாழ்வுமைநீ செய். (7)

செய்யவ டங்குறுந் திண்மார் பினனுயர் செம்மணியார்
பையவிழ் கங்கணச் சீராம நாதர் பதப்பணியுந்
துய்யவ னின்பதத் தன்பே மிகுந்துனைத் தோத்திரஞ்செய்
மெய்யவன் சீராஜ ராஜன் றனக்கருள் வேல்விழியே. (8)

விழியுமொரு மூன்றுடையம் மேயுன் வலக்கண்
வழிமரபி லேயுதித்த வள்ளல்—மொழிமரபார்
வீரவெண்பா மாலையணி வேந்தனைநீ யாண்டருள்பூந்
தேன் மாதா சதா. (9)

தாகம்ப ராவுறுஞ் சீராம நாத சகாயமெனு
நாகம்ப ராய புகழ்ப்பாற் கரசுத னற்கவிதேர்
மாகம்ப ராயவர் சூழ்ராஜ ராஜற்கு வாழ்வருள்பைம்
பூகம்ப ராய முகவா புரியருட் பூரணியே. (10)

பூமே லபன்முதலாம் புங்கவர்க டங்குவளக்
காமே வியமுகவைக் காவலனன்—றாமேவ
மூன்றும் பசுவிரண்டு முன்னுரைக்கு மன்னையிவன்
கான்று வுறுபடியின் கண். (11)

கண்ணுக் கினியது மாதேவ தேவியுன் காண்மலர்த்தாள்
பண்ணுக் கினியது சீராஜ ராஜனிற் பாடுவது
மண்ணுக் கினியது செய்யா மகிடனை மாய்த்தனைநெஞ்
செண்ணுக் கினியதன் னேயுன்னை யேநினைந் தேத்துவதே. (12)

ஏத்துக் குகந்தடியார்க் கேற்றவர மீந்தருளுங்
கூத்துக் குகந்தவனோர் கூறுடையாய்—பாத்துணர்தான்
சூடுமிசைச் சீராஜ ராஜனெனுந் தோன்றலுனைப்
பாடுமிசைச் சீர்க்கருணை பண். (13)

பண்டார மால்வரை வந்தா ரிரதத்துப் பையலைவெ
குண்டார வாவது தையலர் மீதில் குணத்தவரைக்
கண்டார வாழ்வருள் மாதேவ னன்புறுங் காதலிநீ
கண்டார மாண்கவிச் சீராஜ ராஜனைக் காத்தருளே. (14)

காவலர்தங் காவலனைக் கற்றுணர்நன் னாவலர்தந்
நாவலனைச் சீராஜ ராஜனையிப்—பூவலயந்
தாங்குமனத் தண்மையினிற் றசரதி யன்னவனைப்
பாங்குபெறக் காத்தருளம் பூ. (15)

பாட்டுக் குருகும் பராசக்தி யேயுன் பதாம்புயங்கொள்
பீட்டுக் கிரீடன் குலதன மாயுனைப் பேணியுள்ளோன்
நாட்டுக் கிறைமகன் சீராஜ ராஜமன் னூடுவரம்
வேட்டுக் கொளவருள் மாதுளம் போதன்ன மேனிமின்னே. (16)

மின்னோர் தருவடிவாள் வீரியருள் வாரியொளிப்
பொன்னே திருவணங்கும் பொற்பதத்தெம்— அன்னே
புவிராஜன் சீராஜ ராஜனெனும் போதக்
கவிராஜன் நின்னடியன் காண். (17)

கானந்தரன்மகிழ் சுந்தரி யேதாங் கண்டருள்சன்
மானத்த னன்பு மதிநீதி நன்னடை வாய்ந்தசமஸ்
தானத் துரைமகன் சீராஜ ராஜனின் றூடொழுமெய்ஞ்
ஞானத்த னின்புகழ் யாம்பா டிடவைத்த நாவலனே. (18)

நாவுகந்துன் சீர்புகலும் ராஜரா ஜேச்வரனைக்
கோவுகந்த வண்முகவைக் கோமானைப்—பூவுகந்தான்
காவுகந்தான் வன்மைக் ககமுகந்தான் வாழ்முதலெம்
யாவுகந்தே யாதரியம் பா. (19)

பாவைத்த நுண்மதிச் சீராக வன்புவிப் பண்ணவன்சொல்
கோவைத் துறையொன் றிற் பன்னூறு கொண்டமெய்க் கொண்டலை
காவைத்த சேது பதிராஜ ராஜனைக் காகமுமுட் [வண்
பூவைத்த மேனியின் னெமழை யோங்கவிப் பூவுலகே. (20)

——(*)——

## கீர்த்தனை.

("முகத்தைக் காட்டித்தேகம்" என்றது போன்றது.)

இராகம்-பைரவி.

பல்லவி.

சுகத்திற் கிசைந்தவறு பவத்தைக் கனிந்தருளெஞ்
சூரிநன்றரியம்மையே.

அநுபல்லவி.

முகததிறங் கைடநதமது குலததிறகு யாநதிலங்கும்
மூரியஞ் சூர்யகுல தீரன் ராஜ ராஜற்கு (சுகத்திற்)

சரணம்.

(1) சகத்திற்கியைந்தகவி காவியுடனுயர்த்துக்
காட்டுந்துவசன்செம்பி நாட்டின்தவசின்வந்தான்
மகத்திற் கிறைவனை வாசவன் சீர்மிகரும்
மாதனனீடுகந்த மாதனதிபதிக்கு (சுகத்திற்)

(2) அண்டினரையாதரிக் கின்றதயாபரன்
ஆயபுகழ்ப்புனித மேயநற்சேதுபதி
தொண்டியந்துறைகாவல் கொண்டான்முகவைநகர்த்
துரைராஜராஜனென்னு மஹாராஜ பூஜிதற்கு (சுகத்திற்)

(3) சேயனிணியவன்னை மாயனளிகொள்பின்னை
சேதுபதிகள்குல மாதனமாதுலோக
நாயகனுதிசிவ நாயகியாயிகன்னி
ராஜராஜேச்வரிநின் ருசன் ராஜராஜற்கு (சுகத்திற்)

(4) நாகநகரனைய ராமநாதபுரம்வாழ்
ராஜராஜேச்வரியுன் வாசமலர்ப்பதத்தின்
நாதமுறுகவிதை நாளுட்புகலுந்திரு
ஞானசம்பந்தனெனை யாளுய்ராஜராஜற்கு(சுகத்திற்) (21)

ஆசிரிய விருத்தம்.

ஆராருஞ் செஞ்சடையா னம்புலியா ரம்பகத்தா னழலார் மேனிச்
சீராரும் வெண்பொடியான் சிவபெருமான் மனமகிழுந்தேவியுன்றன்
பேராருந் திண்புயவேள் சீராஜ ராஜனிதம் பெருகி வாழக்
காராருங் குந்தளநற் காரணியே யாரணிநீ கருது வாயே. (22)

பொன்னாருஞ் சுடர்முடியிற் பூதரமே யெனமிளிர்ந்து புகுதேர்மீது
மன்னாருந் தொழுமுகவை மாராஜன் பாற்கரவேண் மதலை யாகிக்
கன்னாவ தாரனெனத் திகழ்ராஜ ராஜமுகில் கவின்கொண் டேநம்
மின்னாருங் குழுவமரு லாவிசைமயா விழியினருள் வியவா ராரே. ()

காவேந்துகொடைக்கரத்தான்கவினேந்துதிருப்புரத்தான்கவியோர்
நாவேந்து புகழ்த்திறத்தான் ராஜரா ஜேசனைநீ நயந்து காக்க[தங்கள்
சேவேந்துகொடிப்பாற்கேசெயமேந்துகயற்கொடுத்ததேவியுன்றன்
பூவேந்துதளிர்ப்பதத்தேபொருளேந்துகவிப்பதந்தான்புகலுவேனே

சந்ததி யுடனே மாதரும் பொருளுந் தரணியும் பசுவொடு மனையுஞ்
சிந்தனை மதியு மளவில்கல் வியுநீ டாயுளுந் தினதினக் கோங்கத்
தந்தருள் புரிந்து காத்திட வெனயான் சாமளை யம்பிகை யிருதாள்
வந்தனை புரிவேன் மகிதலத் திறைநீ மகிழ்ந்துநீ டூழிவா ழியவே.()

புவிப்புலவர் குலத்திலகர் தவத்திலவ தரித்தபெரும் புனிதா தாரங்
கவிப்புலவர்மனத்தினிறையுவப்பினொடுதுதிக்குமிருங்கழன்மாராஜன்
இவிப்புலவனிகர்த்தநிதிபடைத்தொளிர்முகவைக்கிறையுன்றிசைடாள்
குவிப்புலவு காத்திலகு முடித்தலைவ னினைத்தவழங் குகமா [மீதா
[தாவே (26)

## கலித்துறை.

வண்டார் தருகுழற் சிராஜ ராஜேச் வரிமலர்த்தாட்
கொண்டாரு மன்பிற் றினத்துதி பாடிக் குளிர்ந்தசுவைக்
கண்டார் திருமொழிச் சிராஜ ராஜநற் காவலநீ
தண்டா ரணியதி னீடூழி வாழ்ந்திதந் தாங்குகவே. (27)

## மாரியம்மன் களியாட்டத்திற் பாடியவை.

பூதலமெல் லாம்பரவும் புண்ணியமே நண்ணுபுகழ்ச்
சேதுசமஸ் தானம் செழிக்கவருள்—போதவளும்
காமாதுந் தொண்டரிடம் நாடக் கடைக்கணிக்கும்
மாமாரி யேநீ மகிழ்ந்து. (28)

## சந்த விருத்தம்.

அருணவெயில் புகவொளித் திருள்குடி புகாவரும்
ஆரற னிலாவு குழலும்
அரைமதி விளங்குநெற்* றியினிலகு குங்குமந்
தார்ந்தழகு சார்ந்த குமிழும்
கருணைமழை பொழிவிழித் திருமுக விலாசமுங்
காரணியெ மாரி யனைநின்
கனகமுயர் கங்கணப் பனகமுறு செங்கரக்
காந்தளொடு தேய்ந்த விடையும்
கருணிலவு குழவியிற் புவியுயி ரெலாமிருங்
காதலுட னேபெறுமிருங்
கவினிலகு பண்புடைத் திருவயிறு மென்பதக்
காந்துமொளி வாய்ந்த தளிரும்
திருமுகவை நகரினுக் கதிபதிந னீதியெஞ்
சேதுபதி காண வருள்செந்
திருவினொடு வெண்டளப் பதுமைதொழு வண்புகழ்த்
தீந்தமிழி னூர்ந்த சுவையே. (29)

கலித்துறை.

பாமாரி பெய்புல வோர்க்கன்னை யாயநற் பார்த்திபன்வண்
தேமாரி பெய்முல்லைச் சீராஜ ராஜன் சிறப்புவந்து
பூமாரி பெய்யவைத் தெல்லா நலமும் புரிந்தருளும்
மாமாரி கௌரி மகமாயி தன்பத மாமலரே. (30)

வெண்பா.

பூவாரும் மாவாரும் பொற்பாரு மார்பபொழில்
கோவாரு நன்முகவைக் கொற்றவனே—பாவாருஞ்
சீமானை விற்பனர்சூழ் சீராஜ ராஜனெனுங்
கோமானின் வாழ்வோங் குக. (31)

பூமேவு கற்பகநா டாளும் புரந்தரனோ
டாமேவு மோலக்க மாண்புடையாய்—பாமேவு
செந்நாவி னின்னிசைசேர் சீராஜ ராஜனெனுங்
கன்னநின் வாழ்வோங்கு க. (32)

திருவாரூர் போர்டு ஹைஸ்கூல்மாஸ்டர்
சி. சுந்தரேசபாரதியாரவர்கள் இயற்றியவை.

பூமருவு மாதிரு வோருமிரு புடையும்
புகழ்க்கற்றை நிலவு தன்பாற்
பொங்கியெ தெழுவதே பொருவவெண் சாமரை
புரட்டவெள் ளிப்பொருப்பிற்
பொலியுநீன் மலையென்ன வாலுளை மடங்கற்
புறத்தவி ரெருத்த மீது
போதந் திருந்துமுக் குடுமிப் புலால்வீசு
புகையழற் கதுவு மொள்வேல்
தேழுருவு கமலக் கரத்தெடுத் தோச்சியெண்
டிசைகாவ லோரு மற்றைத்
தேவருமிவ் வுலகத்தி யாவரும யங்கித்
திகைக்கவரு திருகு கோட்டுச்

செறிமயிர்க் காருடற் பெருமேதி யசுரற்
செகுத்தருளு ஜெகதீச்வரி
தேவதே வேச்சுவரி ராஜரா ஜேச்சுவரி
த்ரியம்பகி தினங்காக்கவே

கோமேவு தசரத குமாரனவு னைமுனங்
கொன்றபழி யொருவி யதனுக்
கோடிகா வலனதிற் பத்தியொடுநாளுங்
குடைந்திபாத் திரைபுரிந்து
கோதிலாத் தன்னையுந் தரிசனஞ் செய்யினவர்
குறைதீர வுதவு குணவான்
குலவுபாற் கரன்முன மியற்றுதவ மெனவவனி
குதுகலித் திடவுதித்தோன்

பாமேவு புலவர்கவி மாலையிற் பொலிபொற்
பருப்பத நிகாதத வாகன
பரிசவர்க் குதவவொரு நாளுங் குவிந்திடாப்
பதுமமல ரனைய கையான்
பாண்டிநாட் டிற்கதிப னாதற்க வின்றமிழ்ப்
பயிர்வளர வுதவு கொண்டல்
பரதார சோதரனி ராஜராஜேச்வரப்
பார்த்திபர்கள் கோன்வாழவே. (1)

பூத்ததமிழ் பத்தியிவை போதாத விக்காலத்
தேத்து புலவ ரிடுக்கணெலாந்—தீர்த்தருள்வான்
தேர்ந்தமுத்து ராமலிங்க சேதுபதி மாரனிக
ரேந்த விடைவிடா தே. (2)

தென்னாட்டு மூவேந்துஞ் சேர்ந்தமுத்து ராமலிங்க
மன்னாக வந்ததுண்மை மாண்புலவீர்—கன்னலெனப்
பாகமுறு முத்தமிழும் பாரி லிவனொருவ
னாகவே காத்தளித்த வான். (3)

பூமணக்கும்பொழின்முகவைக்கதிபன்முத்துராமலிங்கபூபன்வானக்
காமணக்கு நகர்க்கிறைவன் இயன்முன்னரிசைபாடக்கற்ற நல்லோர்
தேமணக்கு மிசையில்வல்ல விஞ்சையர்கின் னரரேமேற் றேர்ந்து நோக்கிற்
பாமணக்குந் தமிழ்ப்புலவ ரிவனவைக்க ணதிகமெனப் பகரலாமே.

இராமநாதபுரம் எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
சுந்தரராஜ ஐயங்கார் அவர்கள் இயற்றியவை.

பதினன்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூவிலுறை புனிதனும் பூந்துளவி னனுமொரு
பூங்கொன்றை யணிச டிலனும்
புகழுமொரு தேவியே புகலரிய வலிமையுறு
பொய்வடிவ மான வவுணன்
தாவிலுறை மகிடனுர மிலகுதிரி சூலமதி
னாற்கொண்டு சாடி வகிரும்
தாயினும் மினியவொரு சச்சிதா னந்தமே
சார்ந்தவர்க் கருள்செய் வடிவே
நாவிலுறை புனிதையே நாரணிம நாதீத
நளினவோங் கார வொளியே
நாதாந்த மோனகிரி புரஸுந்த ரீவரத
ராஜரா ஜேச்சு வரியே
கூவிலுறை திலகமென வொளிர்முகவை நகரையாள்
கோன்கொடைப் பாரி யாகுங்
குணமுத்து ராமலிங் கச்சேது பதியும்ரவி
குலமுகனி வாழ வருளே. (1)

நேரிசை வெண்பா.

செங்கமலை வாழுந் திருமுகவைச் சேதுபதி
நங்கள்முத்து ராமலிங்க நாயகற்குச்—சங்கநிதி
சூழத் திரிபுர ஸுந்தரீ நீயே
வாழ வருள்வாய் மகிழ்ந்து. (2)

நேரிசை வெண்பாக்கள்.

பூமாது வாழ்மார்பா பொங்குகல்விச் சங்கமுறாஉம்
நாமாது வாழ்தூய நாவலவா—சீமானே
அன்புதழைத் தாளுமுத்து ராமலிங்க வாளிமொய்ம்பா
இன்புதழைத் தோங்க வினிது. (3)

சீரோங்க வைகையுறாஉஞ் செவ்வி முகவைமன்னு
தாரோங்க நாளுந் தழைத்திலங்க—ஏரோங்கத்
திங்கண்மும் மாரிபெய்க சேதுபதி யென்ஞான்றும்
செங்கோ லுடன்வாழ்க சீர்த்து. (4)

## வேம்பத்தூர்ச்

## சௌந்தரபாரதியவர்கள் இயற்றியவை.

பொன்கொண்ட நவமணி பதித்திளங் கதிரெனப்
பொலிவுபெறு மகுட முடியும்
பொங்கெழிற் றிலதமணி யமுதமுறு கலைகணிறை
பூர்ணசந் திரவதனமும்
இன்கொண்ட மெய்யருள் கொழித்துவா டாதுதின
மிலகுசெங் கமல விழியும்
இதயநெக் குருகித் துதிக்குமன் பர்க்கருள்செய்
திடுமபய வரத கரமும்
மன்கொண்ட சாம்பூ நதத்திற் சிறந்தொளிகள்
வாய்ந்தமெய்ச் சோதி வடிவும்
மணிநூ புரத்தினொடு தண்டைகொலு சுற்றசே
வடியுந் துலங்க மேவுந்
தென்கொண்ட ராஜரா ஜேச்வரி யுமைப்பரவு
செயமுத்து ராம லிங்கச்
சேதுபதி செங்கோ றழைத்துச் செழித்திடத்
தினமுமவந் தருள்புரிகவையே. (1)

தண்ணார் மதிக்குடை யாண்மெய்ப் புகழ்மிகச் சார்கொடையான்
கண்ணார் கரும்பை நிகர்சொல்லி ஞானிகல் காய்வில்லினன்
திண்ணார் புயமுத்து ராமலிங் கேந்திரன் சீர்பெறச்செ
யெண்ணா ரிமையவர் போற்றிடும் ராஜரா ஜேச்வரியே. (2)

சீர்மேவு முன்ற னிணைத்தா மரைமலர்ச் சேவடியை
யோர்மேவு வந்தனை செய்முத்து ராமலிங் கேந்திரற்குக்
கூர்மேவு கல்வி நிதிமைந்த ரன்புசெங் கோறழைக்கப்
பார்மேவு ராஜரா ஜேச்வரி நீயருள் பாலிப்பையே. (3)

பூதலத்திற் கற்றாய் புலவோரை யெஞ்ஞான்றுங்
காதலுடன் காத்தருளுங் கற்பகமே—சோதிபெறு
கந்தாருஞ் செங்கைமுத்து ராமலிங்க சேதுபதிச்
சிந்தா மணியே செயம். (4)

தருவா லுயர்ந்தன னிந்திரன் றாமரைத் தண்மலர்ச்செந்
திருவா லுயர்ந்தன னாரா யணன்மனத் திண்படிசெய்
செருவா லுயர்ந்தனன் சவ்விய சாசிமெய்த் தேர்ந்தளவின்
மருவா லுயர்ந்தனன் சீராஜராஜ வரோதயனே. (5)

தண்மதியை நோக்கிச் சகோரமா னந்தமுறும்
விண்முகிலைக் கண்டுவகை மேவுமயில்—பண்ணமுத
நேருமுத்து ராமலிங்க நிருபதி சொற்கேட்டுச்
சேருமகிழ் கற்றோர் செவி. (6)

பூவைப் புரக்கும் புரவலர்வந் தேபணியுந்
தேவைப் பதிவாழுஞ் சீமானே—மேவுபர
தேவதையை வந்தனைகள் செய்முத்து ராமலிங்கக்
காவலவ னேமங் கலம். (7)

வேம்பத்தூர்
சிலேடைப்புலி-பிச்சுவையரவர்கள் குமாரர்
மஹாதேவ ஐயர் அவர்கள் இயற்றியவை.

புகைதொழுந் தனுக்கோடிக் கதிபதிநற் றமிழ்நயந்தேர்
புலவோர்க் கென்றுஞ்
சிவிகைமத கயம்பரிதேர் தருமுத்து ராமலிங்கேந்
திரன்வெண் டிங்கட்
கவிகைநிழ லதனிலர சியற்றிமன மகிழ்வினொடு
கனம்பெற் றோங்க
நவிகைவிழி யுமைராஜ ராஜேச்சு வரியருளெந்
நாளுந் தானே. (1)

வெண்பா.

கன்னலே தேனே கனியேநற் கற்கண்டே
இன்னமுதே ராஜரா ஜேச்வரியே—மன்னவருண்
மற்றடந்தோள் மேவிடும்பூ மான்முத்து ராமலிங்கக்
கொற்றவைவேன் மன்னவன்செங் கோல். (2)

சங்க நிதியுந் தருவுஞ்சிந் தாமணியு
மிங்குன்கைக் கீடாகா வென்னவே—துங்கமுடன
மன்னவரும் போற்ற வளர்முத்து ராமலிங்கத்
தென்னவா நாளுஞ் செயம். (3)

பூமான்வாழ் தென்முகவைப் புண்ணியனும் பாற்காப்போர்க்
கோமான் றவத்துதித்த கொற்றவா—காமானுஞ்
செம்மல்முத்து ராமலிங்க சேது பதிராஜ
சிம்மமே நாளுஞ் செயம். (4)

ஈட்டுந் திரவியத்தை யீந்துலகிற் சற்கீர்த்தி
நாட்டு முகவை நராதிபனே—கேட்டருள்செய்
தோடாக் கொடுக்குந் துரைமுத்து ராமலிங்க
சேடா வெனக்குதவி செய். (5)

தேடிவரு நாவலர்க்குந் தேசா ரமைச்சருக்குங்
கோடி பவுனளிக்குங் கோமானே—நாடித்தம்
துன்னலரை வெல்லுந் துரைமுத்து ராமலிங்கக்
கன்னனீ யென்னாளுங் கா. (6).

முதுகுளத்தூர் மதுரகவி
## சுப்பையா பிள்ளையவர்கள் இயற்றியவை.

மூலத் தொருசிற் றிளங்கொடியாய் முளைத்துக் கிளைகள் பலவீசி
மூன்றுகுணமுற் றைந்தொழிலு முறையால் நான்கு யோனிவழி
ஞாலத் தெவையும் படைத்துக்காத் தழிக்கும் ஞானக் கருங்குயிலை
நவிறற் கினிக்கும் பசுங்கரும்பை நாடற் கரிய வோவியத்தை
சீலத் தருநான் மறைமிழற்றித் தெளிந்த பவள வாய்க்கிளியைத்
தேவி ராஜ ராஜேசு வரியைப் பரவித் தினந்துதிப்பாம்
கோலத் தாளம் நிலவெறிக்கக் குமுத மலர்க ளிதழ்விரிக்குங்
கூறுமுகவைப் பதிபுரக்குங் கோமான் றன்னைப் புரக்கவென்றே.

அரன்மால் பிரம னிந்திரன்மற் றமர ரியக்க ருரகர்சித்த
ரகில மனுக்கண் முதற்பலவுங் கலந்துள் ளுயிருக் குயிராகி
விரவு மறிவாய் அறிவறிவாய் விளங்கி யுள்ளும் புறம்பு நின்ற
வித்தைக் கடலை விரும்பவருள் விளைந்த ஞானப் பசுந்தேனைக்
கரமுங் கழலுந் திருமுகமுங் கருணை விழியுஞ் சலசமலர்
காட்டுங்கிருபாநதிப்பெருக்கைக் கவினுந்தேவைப்பதிபுரக்கும்
பரவற் கரிய தேவிதனைப் பனுவல் சாற்றிப் பணிகுதுமால்
பாரிற் குகந்த வெழிற்சேது பதியைப் பாது காக்க வென்றே.

விள்ளுங் கலைதிகழ் ஸ்ரீராஜ ராஜன் விருப்பமிகுந்
துன்னும் பொருள்வெள்ள மாமென நீதந் துதவிசெய்வாய்
கள்ளும் மருமல ரும்பெறுங் கூந்தற் கயற்கண்மின்னே
துள்ளுங் கலாப மயிலே திரிபுர சுந்தரியே. (3)

ஏலஞ் சுமந்த குழலார் மடல்வரைத் தேங்குமெழிற்
கோலஞ் சுமந்தவன் பாவாணர் நெஞ்சிற் குறித்தபல
சீலஞ் சுமந்து தருந்தரு மானுந் திருக்கரத்தான
ஞாலஞ் சுமந்தருள் ஸ்ரீராஜ ராஜ நரேந்திரனே (4)

செங்கதிரைக் கண்டோடுஞ் சேணிருள்போற் பாவாணர்
தங்கலைவிட் டோடித் தணக்குமே—புங்கநிறை
செய்யமுத்து ராமலிங்க சேதுபதி நின்றன்மலர்க்
கையைமுனங் கண்ட கலி. (5)

சீர்கொண்ட மணிமுடி புனைந்துமனு நெறிமுறை
திறம்பலில் லாது செங்கோற்
திகிரிபெற் றமரருக் கரியமக பதியினுஞ்
செல்வமிக் கறமியற்றித்
திகழுமுகில் மாதமும் மழைதரக் கன்னலுஞ்
செந்நெலுங் கதலி பலவுஞ்
செறிவுற்று வளனுதவு முகவையம் பதியினுறை
சிம்மாசனாதி பதியைத்
தார்கொண்ட புயசயில சிங்கார சங்க்ராம
சமரரண வீர வக்ர
தைரியத யாபரதி யாகபர மேசுவர
சாமியென் றகில முழுதுந்
தனித்தனி மகிழ்ந்துரிமை பெருமைகொண்
டாடிடச் சர்வகலை வலவஃ, ஞன
தரணிபனை ராஜராஜேசுவர துரையெனுந்
தருமனை யுகந்து காக்கக்
கார்கொண்ட கூந்தற் கயற்கண்மின் கொடியினைக்
கற்பகக் காவி னுலவுங்
கலாபச் செழும்பசிய மயிலினைத் தொண்டர்தங்
கண்ணினுக் கினிய மணியைக்
கனதன வுலாசசிற் பரசிதா காசநிறை
கௌரியைக் கருணை வடிவைக்
கபாலதிரி சூலசா மளரூப வல்லியைக்
கருதரிய மறைமுதல்வியைப்
பார்கொண்ட பஞ்சாக் கரத்தியை விநோதசௌ
பாக்யநிதி யார்க்கு முதவும்
பனிமொழிச் சின்மழலை தெவியாத கன்னியைப்
பரமனுழை யிலகுருத

பாவையைப் பாமாலை சூடியருள் பூவையைப்
பராகாத விந்தருவமாம்
பகரரிய ராஜராஜேசுவரி சரணபங்
கேருகம் பரசு வோமே. 1850 (6)

பூமாது பாமாது போற்றமலை மீதுதித்த
மாமாது நீகிருபை வைத்தருள்வை—தேமாதர்
தேறுமுத்து ராமலிங்க சேதுபதி யென்றுபெயர்
கூறுமுத்து நேருமகற் கு. (7)

44 அறந்தி ரண்டிரு வாகி யிமாசல
மளவி னுந்தன் புகழ்க்கொடி காட்டிமெய்த்
திறந்தி றம்பலி லாதுசெங் கோன்முறைத்
திகிரி தாங்கி மருவலர்க் கேறென
சிறந்தி கழ்ந்த வுதாரசி காமணி
நீதி யான்முத்து ராமலிங் கேந்திரன்
மறங்க டிந்துல கேழும் பணிசெய
வாலை சூலி வராகி யருள்வையே. (8)

45 மானு மேழு மரமு மெதிர்த்துள
வாலி யுங்கடல் சூழிலங் காபுரிக்
கோனும் பட்டழி வாகச் சிலீமுகங்
கொண்டு டற்றிய கோதண்ட பாணிநேர்
மீனும் வாளும் விலைகண்ணி னார்மதன்
வேந்த னன்முத்து ராமலிங் கேந்திரன்
றேனும் பாலு மெனப்பல வும்பெறத்
தேவி நின்மலர்க் கண்ணருள் செய்வையே. (9)

46 நெய்யிற் படிந்து மழைமுகிலை
நிறத்திற் றடிந்து கருமணலின்
செறிந்து மிளிர்ந்து சைவலத்தை
நேர்ந்து வார்ந்து கடைகுழன்று

மையிற் கருகி யறிவிலிகண்
மனத்தின் முருகி யிருள்சொருகி
மலரும் புழுகும் பனிநீரும்
மருவிக் கமழ்ந்த குழலுமையே
செய்யில் வளைநித் திலங்குவித்துச்
சிறையோ திமங்க ளடைகிடப்பச்
சிறக்கும் முகவைப் பதிபுரக்குஞ்
சேது பதிக்குச் செங்கோலும்
மெய்யும் புகழும் பெருநிதியு
மேன்மேல் விளைய நின்கருணை
விழிகொண் டகலா தூழிதொறு
மேவிக் காக்க வாழியவே. (10)

செருநர்க் குடையான் மதிக்குடையான்
செலவிற் குறையா நிதிக்குடையான்
நிகழ்சக் கரத்தான் மலர்க்கரத்தான்
செவிக்கும் புகழ்ப்பஞ் சாக்கரத்தான்
பருதிக் குலத்தான் பகர்நலத்தான்
பரிமித் திலகு புயவலத்தான்
பனுவற் குகந்த சேதுபதிக்
கெதுவு நினைந்த படியருள்வாய்
பொருவிக் கமஞ்சூல் வயிறுடையப்
புடைத்து முகிலைக் குளப்பும்வரால்
பொலியும் வனசத் தடங்கடோறும்
புரிவெண் பணிலத் தழனியொடு
தெருவிற் சிறுவ ருருட்டுபொலன்
சிறுதே ரொலியும் நீங்காது
சிறக்கும் முகவைப் பதிபுரக்குந்
தேவி ராஜேச் வரியுமையே. (11)

களக்காடு

சத்தியவாகீசுவர ஐயர் அவர்கள் இயற்றியவை.

பூமேவு சேதுகுல பூபன்முத்து ராமலிங்கக்
காமேவு வண்மைபெறுங் காவலனைப்—பாமேவு
மின்னே மலைவிளக்கே வீறு மலர்ச்சுடரே
யன்னே யினிதாண் டருள். (1)

சிதமதி நேர்வதனன் சிராஜ ராஜன்பாற்
போதவருண் மாரி பொழிதருவாய்—பாதமலர்
பூராஜ ராஜரெலாம் போற்றும் புகழ்த்தேவை
மாராஜ ராஜேச் வரி. (2)

பேர்பெற்ற செம்பி வளநாடு காத்துப் பெரும்புகழ்ப்பூந்
தார்பெற் றிலங்கிடுஞ் சிராஜ ராஜனைத் தாங்குகென்றே
யார்பெற்ற போதன் வழிபட்ட தேவி பராபரையாஞ்
சீர்பெற்ற கன்னி யபிராமி சேவடி சிந்திப்பனே. (3)

அந்தண ரோது மருமறைத் துதியும்
ஆடுவார் ஆட்டமும் பாட்டும்
அணிவட மொழியு மரியதென் மொழியு
மளந்தறி புலவர்பா வாழ்த்தும்
கொந்தண வுறுதீந் தேனிசை கொழிக்குங்
குளிரிய மரத்திசை யொலியும்
குங்குமச் சேற்றுக் குடமுலை மடவார்
கூடுபல் லாண்டுரை குரலும்
சந்தத மேக முழக்கொடு தழைக்கத்
தயைவளர் சாம்பவி பூசை
தகுமுறை புரிவித் துலகெலா முவப்பத்
தன்னக முவக்குமே தகைமால்

கந்தனை நேரும் ராஜராஜேசன்
கவினுறு காவியக் குடையான்
கற்றவர்க் கெல்லா நற்றவ மனைய
காவல னூழிவா ழியவே. (4)

மாவலர் திகழு மார்பா ராஜராஜேச வள்ளால்
காவலர் தீவு செய்த நல்வினைப் பயனீ யென்பர்
பாவலர் பரிந்து செய்த பாக்கியம் பழுத்த தென்பேன்
பூவலயத்து ளாட்சி புகழொடும் பொலிக நன்றே. (5)

---

திருச்செந்தூர்

## மு. கிருஷ்ணசர்மா அவர்கள் இயற்றியவை.

---

வேதநா லாதிகலை தேறினோ ரேனுமுரன்
மேவிடா ராயினவர் மனவாவி
மீதவா வானகுதி யோடுதா வாவதனில்
வீணிலே மோகவலை வருமாறு
மோதகா மாதியரு மேதியே ழனைவைகண்
மூவமே லானவரு டரலோடு
மூகையா ளானின போதமார் பாதவருண்
மூழ்கினு ளமுதன்மை யருள்வோயே
மேதைசேர் பாவலவர் வாசனூ டேகளிறு
மேயுமா தீகைபுரி வதனாலும்
மேவலார் தாம்வெருவ வீறுதோ ளாலுமிள
வேனிலான் நேரழகி னுருவாலும்
நாதமார் வீணைமுனி யாதியோர் பேணிடும
நாகலோ கேசனென விசைமேவு
ராஜரா ஜேசனிடை ராஜரா ஜேசரியெ
நாளுமே நீகருணை புரிவாயே. (1)

முத்தமிழைப் பாடியும் மும்மலத்தி னீங்கியும்
வித்தகர்தாம் போற்ற விளங்கியும்—இத்தலத்தில்
ராஜரா ஜேசரியால் ராஜரா ஜன்பெறுக
போஜரா ஜன்போற் புகழ். (2)

தேனே யினியென்று செப்புதல்போற் கொன்றைமலர்க்
கானேய் சடைப்பரமன் காதலியே—பாநாடும்
மாராஜ ராஜனைக்கா வென்றுநனி வாழ்த்துகின்றேன்
ஆராத பேரன்பி னால். (3)

சங்கைசென்ற வின்பமென்ற குன்றினின்றி லங்கவன்பி
னண்டரென்றும் வந்திறைஞ்சு மாதேவதேவி
செங்கையொன்றி லம்புயங்கொ ளம்புயங்க ளேந்திரண்டி
ரண்டுகொண்ட எங்கள்கந்த வேளாதிதாயே
மங்கையின்கு சங்குடம்ப றம்பிதென்ற சிந்தையின்றி
நின்பதம்பு கழ்ந்திலங்கு சீராஜராஜன்
மங்களஞ்சி றந்துயர்ந்து சந்ததஞ்ச யம்புரிந்து
மண்டலம்பு ரந்துநன்கு நீடாயுள்வாழ்க. (4)

இராமநாதபுரம் தேவஸ்தானமாபீஸ்

ப. சிவசாமிசேர்வைகாரர் பாடியவை.

புவிராச ரேவல்செயப் பூந்தமிழ்ப்பா மாலை
கவிராசர் சூட்டக் கவின்சேர் —இவிராசன்
போன்றமுத்து ராமலிங்க பூமான் புகழெந்த
ஞான்றுமினி தோங்குகவே நன்கு. (1)

கட்டளைக் கலித்துறை.

சங்காவி யன்ன நிறைசெம்பி நாடன் சகலகுணன்
நங்காம தேனு வெனவந்த சீதரன் நாடுபுகழ்ச்
சிங்காச னாதி பதிராஜ ராஜ சிகாமணியின்
பங்காக வந்தருள் பாலிப்பை யானந்த பைரவியே. (2)

பழுதாய நீக்கியும் பண்பாய கொண்டுநின் பாதத்திலே
வழுவாத பூசனை மாறாத தொண்டன் மதுகரந்தான்
உழுதாரு மார்பன் திருராஜ ராஜற் குவந்தருள்வாய்
எழுதா மறைக்குமங் கெட்டாப் பொருளா யிருப்பவளே. (3)

மால்கொண்ட வஞ்சப் பகைவரை வாட்டி மருவன்புதன்
பால்கொண்ட சீலரை யீட்டி யுலகம் பரவுறுசெங்
கோல்கொண்ட சேது பதிராஜ ராஜற் குவந்தருள்வாய்
சேல்கொண்ட கண்ணி யுமையே யடியவர் சேமவைப்பே. (4)

ஆழும் புனற்றிரை சூழ்வைய மெங்கு மணிகுடையின்
நீழ லளிக்கின்ற சீராஜ ராஜ நிருபனென்றும்
வாழும் படிக்கருள் பாலிப்பை தெய்வ வடிவழகாற்
சூழுங் கலாப மயிலே திரிபுர சுந்தரியே. (5)

கந்தர மிருந்த கூந்தற் காரணி கருணையாலே
நந்தலி லறத்தி னாற்றல் நனிவரு செல்வ மோங்கிச்
சுந்தர ராஜ ராஜன் துணைவரும் புதல்வர் தாமுஞ்
சந்தத மூழி தோறுந் தழைத்தினி தோங்க மாதோ. (6)

காக்குங் கருணையொடு கல்விகனி வாமதுர
வாக்குந் தழைத்திங்கு வந்தவனே—யாக்கமிகும்
சீர்த்திதரும் ராஜரா ஜேச்வரீ யென்றுமனப்
பூர்த்தியுடன் வாழ்க பொலிந்து. (7)

## காப்பு.

### நேரிசை வெண்பா.

தண்டமிழ்தே ருத்தமத யாளுதுங்க சேதுபதி
மண்டலிகன் ஸ்ரீராஜ ராஜமன்மேற்—கண்டுமொழி
நான்மணிப்பா மாலைசொல நன்றே யெனக்கருள்வாய்
நான்மணிக்கை மும்மதத்தாய் நன்கு. (1)

போற்று மணிச்சுடிகைப் பொற்பரவின் பூபார
மாற்றும் புயவரையான் மன்பதைக்கே—சாற்றுமுயிர்
தானனையான் ஸ்ரீராஜ ராஜன் தமிழ்க்கருள்வான்
மானனைய வள்ளிமணா ளன். (2)

கால முகிலனையான் கற்பகக்கா வூர்க்குயர்ந்த
கோலத் தனிமுகவைக் கோமான்மேற்—சீலமிகும்
பாமாலை பன்னவெமைப் பாலிக்குந் தேங்கொன்றைப்
பூமாலை சூடியடிப் போது. (3)

நெய்யழித்தே நண்ணலர்தந் நேயமின்னார் கண்ணெழுது
மையழித்தே யோங்கு மறவேலான்—பொய்யழித்தார்
நெஞ்சிருக்குந் தேவையர்கோன் நேர்தமிழ்ப்பா விற்கருள்மாம்
பிஞ்சிருக்குங் கண்ணுமையே பேண். (4)

நற்றமிழ்வா ணர்க்குநிதி நந்துதலி லாதமுகில்
எற்றுதிரை சூலழுகோ ரெய்ப்பினில்வைப்—புற்றபுகழ்ச்
ஸ்ரீராஜ ராஜன் செழுந்தமிழ்மா லைக்கருள்வான்
நேராக நற்கலைமா னே. (5)

## முன்னுரை.

மன்னிரும்பைப் பொன்னெனவு மாநிலத்தார் சொல்வழக்கா
லென்மொழியை நாவலர்த மேர்மொழியா—யுன்னியருள்
ஓதுசமத் தானதள சிங்கமென வோங்கிவளர்
சேதுசமத் தானா திபா. (6)

## வாழ்த்து.

ஓவியத் தெழுத வொண்ணு ரொளிர்முக மதியம் பூத்த
மாவியல் விழியாஞ் செந்தா மரைக்கொரு பகலோ னாகிப்
பூவிய லரசர் கையாம் பொலன்றிகழ் கமலத் திற்கே
மேவிய மதியாம் ராஜ ராஜன்சீர் மிளிர்க மாதோ. (7)

## நூல்.

பூவிருக்கு மாதிருக்கும் பொற்பிருக்கு மார்பினிடை
மாவிருக்கு நாவிருக்கு மன்கரத்திற்—காவிருக்கு
மாராஜர் போற்றிரவி மன்னுகுல தீபனெனுஞ்
சீராஜ ராஜனையே சேர்ந்து. (1)

சேலனந் தந்த வயல்சூழ் முகவை செழிக்கவென்றே
பாலனந் தந்திடு பார்த்திப னென்றும் பகைவர்பணி
வேலனந் தாமரை நண்பன் குலமணி வேண்டநல்குங்
காலனந் தாமுகில் சீராஜ ராஜ கனதுங்கனே. (2)

கற்பகலா மடமாதர் கவினகலா முகவையில்வாழ் கண்ணன் மேரு[தண்
வெற்பகலா மணிப்புயத்தான் விரையகலாநறுமலர்த்தார்வேந்தர்வேந்
பொற்பகலாப்பாற்கரமால்புரிதவத்தாலவதரித்தபுகழ்சேர்கன்னன்.
அற்பகலாத் திருமனத்துச் சீராஜராஜனெனு மழகி யோனே. (3)

அழகமர் திரைபல வடுக்கிய புணரி
நீனிற வாடை தான்மருங் கசைத்த
நிலமின் றுணுது நலமிகு குளத்துத்
தேங்கொளி பரப்பிப் பாங்குடன் பொலியும்
நித்திலச் சுட்டி யொத்தநன் முகவை
முயன்ற தவத்தின் முழுப்பய னென்னப்
பொதியச் சிகரம் வதியுங் குறுமுனி
யரும்பெறற் றமிழுணங் கன்புடன் படர்தரும்
கொழுகொம் பென்ன வழுவறு செஞ்சொல்
புணர்த்திட் டுரைக்கு முணர்ச்சி மிக்கோர்
சேமவைப் பென்னக் காம முதலிய
முக்குறும் பெறிந்த ஏதக நி வாளர்

நற்றுணை யென்னப் பற்றொடு புகழுஞ்
செங்கோற் செல்வ சீராஜ ராஜ!
பன்மொழி யறியாச் சின்மொழி யுடையேன்
ஆயினு மாசையென் வாய்வழி நில்லா
தின்னது தொடுத்தேன் மன்னவர் மன்ன
குற்றமுங் குணமாக் கொண்டேன்
சொற்றமிழ் மாலையுஞ் சூடுக துய்த்தே. (4)

துய்யதனுக் கோடித் துறைசிறக்கத் தொன்மையுறும்
வய்யமனுக் கோடிபெரு வாழ்வெய்தச்—செய்யகுலம்
வந்தமுத்து ராமலிங்க! வன்கவடு காயிலையைத்
தந்ததரு நிற்கிணையோ தான். (5)

தாராரு மார்பன் தனக்கெனை வாழாப் பிறர்க்குதவு
சீராரும் வேள்முத்து ராமலிங் கேந்திர னீள்வரைக்கண்
காராருந் தோகையன் னீர்களிப் பேற்குயர் கள்ளொழித்து
நேராநற் கூந்தற் பனையளித் தீரிந்த நேர்மைநன்றே. (6)

நளியாருந தளவமலர்த் தொடையாருஞ் சீராஜ ராஜனுங்
களியாருந் திருமுகமன் பவனிவரக் கண்டுமயல் கலந்துநின்றேன்
துளியார விழியுகுக்கச் சுற்றத்தா ரலரியம்பத் துன்பு கொண்டேன்
அளியாரு மளியார மளியேயென் பாலளிக்க வளிகொள் வாயே. ()

அளிமது வுண்ண வலைதரும் பெற்றிபோ
லாதுலர்க் களித்தே யதன்பய னறியாப்
புல்லர்வாய் தோறும் போய்ப்போய் வாளா
யிலவுகாத் திருந்தே யலமருங் கிளிபோ
லுலைவுறு நெஞ்சொடு மலைவொடும் போக்கு
இரவல ரேயோ யிரவல ரேயோ
நீர்நசை மிக்கோர் பாரிடை யாண்டுந்
தெண்ணீர்க் கருங்கட லுண்ணார் கண்டோர்
நீளக் கேணி யாழ்புன லெனினும்
வருந்தியுங் கொள்வர் வழக்கா றதுவே
நீலாக் கொள்ளலு மின்ன பரிசே

யாதலின் வம்மி னலக்க ணொழிமின்
நன்றென் றுரைப்ப வின்றுநீர் கேண்மதி
யேற்போர் வருகென வெழிலார் கொடியைக்
கடாஅக் களிற்றின் பிடர்மிசை யேற்றி
யிடிகுரன் முரசா லதிர்படச் சாற்றி
யெய்த்தோர் கண்ட மானினை யெய்க்கும்
நம்மனோர் கொண்ட வெம்மனோ யாற்றி
முகமன் கூறி யகவிட ரோட்டி
வேண்டுநர் வேண்டியாங் கெய்த நல்கும்
புண்ணிய புருடன் கண்ணிய வீரன்
ராஜரா ஜேச்சுர நற்பெயர்ச் சீலன்
நவையில் மல்லல் முகவையம் பதிதான்
அணித்தெனக் கேட்டே னதலி
னினித்துயர் தந்தநம் மிலம்பாடு சேணே. (8)

செல்விரும்பி நின்றவிழித் தேமொழியார் தாவிவரு
நூல்விரும்பி யுன்றனிரு நோன்றகழற்—கால்விரும்பிப்
போந்தமுடித் தெவ்வர் புவநேக வீரனென
வேந்தனுனைத் தானிசைத்தா ரே. (9)

எறியுங் கலிதலை நாண வெழிற்புல வோர்கவிதை
யறியுங் குணமுத்து ராமலிங் கேந்திர வண்ணல்வெற்பிற்
பறியுங் கலையும் வளையும் பிறவும் பரிந்துகுத்தாள்
வெறியுந் தணிக்க வெறியெதற் கோயென் வெறியுமக்கே. (10)

வெறும்புவிலே மதன்வளைத்தான் சீராஜ
ராஜனெனும் வேந்தே கண்ணீர்
தெறும்பனுடன் வெனிதைபடு தனித்துயரோ
சொல்வரிது தாது விஞ்சும்
பொறும்பரிசன் மலர்ச்சேக்கை கிடந்துசுக
மனம்போதா புயலைப் போற்றி
விறும்பனுடன் சந்தனுப்பி விழிபூக்க
வழிநோக்கி வெருவும் நின்றே. (11)

நின்றணி காட்டும் நீள்கொடி மாடக்
குன்றுகள் பற்பல வொன்றிய முகவா
புரியர சினிதே புரிதருங் கோவே
யாதுலர் வைப்பே யேதில ரேறே
தனவுந் திருவும் வளர்பொன் மார்ப
பல்புக ழார்ந்த தொல்குடி வேந்தே
கோது பதியாச் சேது பூப
விரவலர்க் களிக்கும் வரகுண மன்னு
தேசு மிகுந்த ராஜரா ஜேச
மன்றத் திடையே குன்றுத் திருக்குந்
தெள்ளிய பழுமரம் புள்ளார்ந் தன்ன
பீடும் பெட்புங் கூடுநின் கோயிலி
லுண்ணுந ரீண்டித் தண்ணளி பெறுதலிற்
பசிப்பிணி மருத்துவன் நீயே யாதி
வென்றியும் வளனு மிகுந்திங்
கொன்றிய புகழுட னோங்குகநின் மாண்பே. (12)

மாலாகுங் கார்கொள்ளு மற்றுமிடி கொண்டுழலுங்
காலான்மோ துண்ணுமிவை கண்டிருந்தும்—மேலாய
மர்ட்சிமுத்து ராமலிங்க வள்ளலையு மேகமெனக்
காட்சியிலார் சொல்வதெவன் காண். (13)

காளையும் வாளையு மாயத்தி னின்று கலக்கியவொர் 55
மானையுஞ் சீராஜ ராஜ வரோதய மாறன் வெற்பி
லானையுஞ் சிங்கமு மிந்துவும் பாம்பு மகன்முகிலிற்
றேனையுங்கொண்டொருதீங்கொடிகாணுமித்தேம்புனத்தே. (14)

55 புலையடங்காக் கழிநாளும் வாரியுனக்
கியான்செய்த பொருந்தா வின்ன
லிலையடங்காச் சினம்விணி லேன்கொண்டா
யெனதுபழி விடுமோ நின்றன்
சொலையடங்கா நாவாயுங் குழறமிகு
வம்புகணி தொடர நின்றாய்
மலையடங்காப் புயமுத்து ராமலிங்கன்
மருவிடிலென் செய்வை மன்றே. (15)

மன்னு மாதவர் பன்முறை போற்றுந்
துன்னிள மரக்கா முன்னுறு சீர்த்தி
நன்ன ரோங்கிய பொன்னொ டொக்கும்
சேது பதியாச் சேதுநன் னாட
சிராஜ ராஜ செழுமதிக் குடையநின்
னெஞ்ச மெண்ணிய தெஞ்ச லின்றியே
கைகூடு மென்பது மெய்யே யாகலின்
கறுவுகொள் நெஞ்சிற் கருதலர் தாமே
மனமே வெயர்த்துத் தினமே நழுவினர்
அஃதான்று; போர்க்களம் நீபுகிற் பொருநரு முண்டுகொல்
லல்காப் பீடு மல்கிய நிறைவு
கருணை கொண்டு மருவிய மன்பதை
கனமுந் திருவுங் கவினப் பெருகினர்: அதனால்
மலர்தலை யுலகம் மாண்பொடு மணந்த
வொருபெரு வேந்த ரரும்பெற லீட்டத்துக்
கைவிரல் மடக்கி மெய்யொடு பார்க்கி
னுவமை யில்லென வமையு மாகலான்
காண்டகு சீர்த்தி யாண்டகை
நீயே யென்ன யாருந் துணிவரே. (16)

துங்காவித் தாரா சுமுகமுத்து ராமலிங்கா
செங்காவித் தாரா திருமார்பா—யெங்காதற்
கண்டுமொழி யென்மேற் கலந்தமையற் கோரமிகக்
கண்டிருந்துஞ் சொல்லெணகங் கல். (17)

கல்லாது கேட்பவர்க் கீயாது வாளா கழித்திடுநா
ளில்லாது நெஞ்சுங் கலங்காது வன்கண்மை யேன்றசொற்றுன்
சொல்லாது நாவிற் பிழையாது சொல்லருந் துட்டரினம்
மில்லாது வாழ்பவன் சிராஜ ராஜன் நிதந்தழைத்தே. (18)

திழைகொண்டு தமிழ்மலையச் சந்தனு டவியருவிச்
சாரன் முத்தி
னிழைகொண்டு மன்மதன்போ லெழில்கொண்டு மடிக்கடி வந்
திசைப்ப தென்னே
மழைகொண்ட கரதலத்தான் சீராஜ ராஜமன்னன்
வளஞ்சேர் வெற்பிற்
பிழைகொண்டு தமர்முனிந்தா லென்செயலாம்
போய்வருவீர் பின்னைத் தானே. (19)

தானே யுயர்ந்துந் ததும்பிடா தாணையின்
நின்றே மன்பதை நிலைபெறக் காக்கும்
நளிர்கடல் வளைத்த வொளிகிளர் வையத்துப்
புண்ணிய மொருங்கே நண்ணிய நாவலந்
தீவகந் தன்னுள் தாபதர்க் கிருக்கையும்
பவப்பிணி யறுக்குந் தவப்பல தீர்த்தத்
துறைகளுங் கோயிலுந் துகள்று மூர்த்தியு
மகவயிற் கெழீஇய முகவையம் பதியிற்
செங்கோல் புரியுஞ் சீராஜ ராஜ
மூர்த்திய பிறப்பில் முயறவப் பயனால்
நந்துத லில்லா நன்றியில் செல்வம்
முந்துறக் கொண்ட மூதறி வில்லார்
உண்ணார் கொடாஅ ருடாஅர் பூணார்
பூதக் காப்பே போலும் பெற்றியர்,
நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்றெனும் பெருமொழி
வாய்மை யறியா வங்க ணாளர்
அன்னவர்க் கறன்முறை நன்னர் விளக்குவான்
இலனெனுஞ் சௌவ முரையா திலங்கும்
தொல்குடி வந்த பல்லிசை வேந்தே
நீங்கா வளனு நிறைதரு சுற்றமும்
வீங்கிய புகழும் வென்றியும்
ஓங்க நாளு மொளிபெற வளர்ந்தே. (20)

வம்பாரிப் போதணைவாய் வண்டினமே மின்னார்பா
வம்பாரிப் போதணைவாய் வாவெனவே—பம்பலரி
தையெடுத்துச் சீராஜ ராஜனுக்குத் தான்சொலுவீர்
கையெடுத்துக் கும்பிடுவேன் காண். (21)

காரும் பதுமமுஞ் சங்கமு மானுங் கலந்தொருங்கு
சேருங் கொடைமிகு சீராஜ ராஜன் சிலம்புடையிர்
நேரும படனும தல்குலென் றெண்ணிய நீளனந்தன்
பாருஞ் சுமந்துவன் காதுங் குறைந்தான் பருவரற்கே. (22)

பருத்தப்பா இடையியலா முலைவளைத்துப் படுமாரன் பஞ்சபாணம்
இருத்தப்பா லனங்கசந்து மனம்புழுங்கி மலரணைமேலிராளென் பேதை
வருத்தப்பாத்திரமல்லசெழுந்தமிழ்ப்பாமாலையொடுவண்ணமுல்லை
திருத்தப்பா துறைதருதோட் சீராஜ ராஜவினிச் சிறக்க நல்கே. ()

நந்துகூ ழுளைந்து நலம்பெறவுழுது
கொங்குறு முளைபோற் றங்குமுத் திறைத்த
இடங்கெழு பணையிற் கடுஞ்சினப் பகடே
யென்னும் மேதி கன்னல் கறிக்கவும்
கண்ணார் முத்தம் பன்னோ வுறுத்தக்
குதட்டிய வாய்க்கடைக் கொழுவிய சாறு
வழிய மதமென வண்டினம் மொய்க்க
வெருவிய பேழ்வாய் வெடிக்குரல் கேட்டுப்
புள்ளின மிரியும் பொருவி லோதையைக்
கன்னிமிர் நெடுந்தோட் கருங்கான் மள்ளர்
வருந்திக் கோலிய வானுயர் வரப்பை
வையைப் புதுப்புனல் வாங்கிய வொலியெனத்
திகைத்தே நோக்குஞ் சீர்வள முகவை
புரந்திடு கோவே யறந்தழை முகிலே
யுணவுநீ ரில்லெனி னுலக மமையா
தனையும் பெரும நின்னிற் பெறுமே
யாதலின் மன்பதைக் காருயிர்
நீயென வுலகம் நிலைபெறக் கருதுமே. (24)

கரும்புக்கு வல்லெறும்புங் காவுக்குப் புள்ளு
மருப்புக்கு வண்டினமு மாரும்—பெரும்புகழே
நீடுங் கொடைமுத்து ராமலிங்க நீண்முகில்பாற்
கூடும் புலவர் குழாம். (25)

சூடியிருந் தோளிற் கொள்ளிவைப் போரெனக் கோண்முலைகள்
படியிருந் திமை படைத்தன கண்டும் பகைவரணி
முடியிருந் தேறுங் கழல்ராஜ ராஜன் முகவையினீர்
கடியிருந் தேனசை கொண்டிடை வாட்டலென் காமர்வண்டே.(26)

வருகோடி யிருகருப்புக் கருகோடி வளைத்துமதன் வாங்கி நின்று
முருகோடி யருந்தவண்டு முரல்கோடி யரும்பெடுத்து முனைந்தே கோதைக்
கிருகோடி கணைதொடுத்தான் குருகோடி யிடவாளை யினந்தான் மேகத்
தருகோடி மழைதூற்று மணிகோடிக் கரசேசீ யணைவாய் மன்னே. (27)

மன்னிய வுவர்க்கழி மாற்றரும் புலவு
முனைங்கன் மீனி னுள்ளடு நாற்றமும்
பாக்கம் யாண்டும் பரந்து கிடத்தலின்
தென்காற் சிறுவன் திமிலர்நெஞ் சுவப்பக்
கரைபொரு வாரித் திரைதுளி வீசித்
தாழையு ஞாழலுந் தருமலர்ப் பொடியைய
நலம்பெறத் தூஉய் நறுமணங் கமழ்த்தப்
புதுமணம் விரித்த பொழிலுறு திடரில்
நுளையச் சிறுமியர் நுண்ணிடை வருந்த
முண்மீன் வேலி முறையிற் கோலிச்
செங்கை சேப்பச் சிற்றி லிழைத்ததை
வீங்கு தெண்டிரை மேவியங் கழிக்க
வெதும்பு நெஞ்சினர் விரிமுண லிழைத்தே

யன்னைக் குரைப்பமென் றாற்றிய சும்மையி
னிருலின் மயங்கி யிசையுட னெடுத்த
பருந்தினங் கால்கொள் பவனத் துண்டம்
நழுவல் கண்டு நடுங்கி வெயர்த்தே
யோடிய பிறைக்கட் குற்றது கேட்ட
முழுமதி புரைமுக முகிழ்முலைப் பரத்தியர்
வாலெயி றிலங்க வருதலின் மதுவுறப்
பகலிற் குமுதம் பல்லிதழ்க் கதவந்
திறக்கும் நல்வளந் தேக்கிய சேர்ப்ப
இரவலர்க் களவா றீயும் வள்ளிய
சீலமார் செல்வ சிராஜ ராஜ
மான கவச மன்னுக
பீடும் வாழ்வும் பெருகி நாளுமே. (28)

கானுலவு வேற்கண்ணாய் ஞாலமுழு தும்பரந்து
சேனுலகெ லாநிறைந்து தேங்குமே—யானார்முத்தம்
நந்துமிழுந் தண்சேர்ப்ப னங்கண்முத்து ராமலிங்கச்
செந்தமிழின் பைந்தொடையான் சீர். (29)

சீலத் தனரச ராவண ராமன் சிறப்புறுசெங்
கோலத் தனயன் சிராஜ ராஜ குபேரன்வெற்பி
லாலத் தவிர்விழி யாய்நனி கூதமொ டாடல்கொள
ஞாலத் தவர்பணி செய்யுயர் வேலையு நல்குநின்றே. (30)

நிலம்வளைக்குங் கருங்கடலு நிசியுமுற மதன்றனது
நிந்தை கொள்கைத்
தலம்வளைக்குங் கரும்புதரு மலர்மகளைக் குளிசியெனத்
தந்தும் பொங்க
நிலம்வளைக்கு மெதுபுரிவாள் நினைவுவிட்டே நிகம்பரியாய்
நின்று ளந்தோ
நலம்வளைக்குஞ் சிராஜ ராஜநின தருளினுயிர்
நல்கு வாயே. (31)

நளிர்கடல் வளாகங் களிபெறப் பொதுமை
யின்றென வளிக்குங் குன்றுயர் தோளன்
நடுமை திரியா நலங்கிள ரிரவியின்
கோதறு குலம்வரு மாதவ நம்பி
பிறர்துயர் பொறாஅப் பெருந்தகை யாளன்
வானினு மானினும் வழங்கும் வள்ளல்
உபய சாமரன் உல்லாச நளினன்
காவிக் குடையன் கவிகெருட கேதனன்
இன்சொல் வாய்மை கொஞ்சிடு பஞ்சரம்
பொறையரு ளுறுதி பொங்குந் தடாகம்
அன்பே யுருவா யமைந்த கோமகன்
சினத்தைச் சினந்த சீராஜ ராஜன்
மனத்துக் கினிய மகிபனும் அரசே. (32)

அறமிருந்த நெஞ்சன் அணிமுகவைக் கோமான்
மறமிருந்த வேலன் மருவார்— புறமறிந்தே
யாவித்துப் பாண்டியசோ மூர்க்குயிரை யன்றளிக்கத்,
தாவிக்கு வேலியென்றார் தாம். (33)

தாகா வெனப்புவி சொல்லாமு னன்புடைத் தாயெனவே
பாகா மெனமொழி பன்னிப் புரக்குநற் பார்த்திபன்சீர்
வாகா னவன்கன யோகன் வளர்செம்பி வான்குடிக்கோ
ரேகா திபனுயர் சீராஜ ராஜ விளந்தருவே. (34)

தரும்பாலு மமுதுமெனத் தகுமொழியீர்
யானிருக்குந் தன்மை கண்டும்
பெரும்பாலு மிவளுமொரு பெண்பாலென் றெண்ணுமற்
பிழையே செய்தீர்
இரும்பாலு மனம்படைத்தீர் சீராஜ ராஜனையே
யிசைப்பீ ரென்பாற்
கரும்பாலுஞ் சுரும்பாலு மரும்பாலு மென்செயலாங்
காமன் றானே. (35)

தானே கனிந்த தமனியத் தேமா
மாபெரும் புணரியில் வந்திடா வமுதஞ்
சேற்றிடை மலராச் செழுநறுங் கமலம்
வரையிடைப் பிறவா வாலொளி வயிரம்
நல்லிருள் தனக்கே நண்ணிய வுறையு
ளென்ன மகிழ்ந்தாங் கெய்திய குழலாள்
வஞ்சமுங் கொலையுங் களவும் வந்தே
புதுவது குடிகொள் பொருவில் விழியினள்
முருந்துறழ் மூரல் திருந்தி யோங்கிய
தேன்கிளர் துப்பிதழ்ச் செவ்வா யன்னம்
குழலும் யாழுங் குழறிநின் றேங்க
மழலையா ரின்சொல் மன்னிய தேங்குயில்
காம ரசந்தான் கமழப் பொதிந்த
கனகச் செப்பெனக் கவின்பெறு முலையினள்
சற்றே முலைப்பொறை யுற்றே யசையும்
மின்ன லென்ன மன்னிய விடையினள்
மதன்பல நோற்க மலரவ னிரங்கி
உதவிய பீடமெனவுய ரல்குலள்
கண்ணுள் வினைஞர் கைபடக் காட்டிய
வோவிய மொன்றுயிர் மேவிய தென்னச்
சீருஞ் சிறப்புஞ் சிவணிய பொற்கொடி
கரைகட வாத கடலென வன்னை
யுரையிடை நின்ற வொருதனிப் பண்பினள்
பொதியச் சிகரம் வதியு மருத்தை
உதியமை தீயென வுன்னு நீர்மையள்
வடவைக் கொழுந்தென வான்பிறை யெண்ணு
முழுது முவக்கும் முளரியந் திருவாள்
ஆய மயிலே யணிநிலா முற்றத்து
ஆய வெள்ள மணைதர நின்றே
பல்லாற் றானும் பான்முத் துதிரப்
பந்துங் கழங்கும் பாடி யாடி
நின்றிடு போழ்து நீள்விசும் பதிர

அடர்ந்துரு டேரி யணிமுறைப் பந்தியும்
தேம்படு மொருகவுட் சிறுகட் கோடுறு
மிலக்கணக் கார்முகி லிலங்கிய படையும்
கடுநடைச் செண்டுளைக் கலிமா நிரையும்
சேகரச் சென்னிய செங்கட் டைய
வலந்தரு தோள வுறுமிடிக் குரல
காலாட் படையுங் கவினப் பொலிந்து
அணி நிறைந்த பவனியிற் போந்த
சீராஜ ராஜநிற் செழுங்குயில் கண்டவவ்
வற்றங் கொண்டே யுற்ற மான்மகன்
வளையாக் கரும்பை வளைத்தைங் கணையு
மேவினன் பத்துநூ றுயிர மென்னக்
கொள்ளாச் சோகங் கொண்டனள் மங்கை
இன்ன திதுவென வியல்புறத் தெரியா
தாயம் மயங்க வன்னையு நொந்தனள்
பொன்னே ரணையாள் பூவணை சுடுமெனு
மூமரிற் கண்ட வொருகண வென்ன
நெடுக விழித்து நெட்டுயிர்த் தேங்கும்
கைவளை யோடும் மெய்வளை தூசும்
நழுவ வளர்ந்த நாணமுந் தளரும்
தன்கண் போலு மென்கணும் வெருவும்
அன்னே மன்ன விதன்றிறம்
நன்ன ரெனக்கே நயம்பெறச் சொல்லே. (36)

சொற்புலவோர் தம்மைத் தொடர்ந்து வருகலியைப் 55
பற்றித் 'திருகிப்' பறக்கவிட்டான்—பொற்புயமார்
வான்முத்தம் மின்னார்தம் வாட்கண்ணும் போதலர்த்தும்
மான்முத்து ராமலிங்க மன். (37))

மன்னுக் கழகுநற் சான்றோ ருறைதல் மதிவதனப்
பெண்ணுக் கழகு மொழிகட வாமை பிணக்கமிலாப்
பண்ணுக் கழகுநற் பாடலிற் சேர்தல் பயன்தருமிக்
கண்ணுக் கழகுநஞ் சீராஜ ராஜனைக் காண்பதுவே. (38

௬ கலைவளைத்த குணக்கடலான் கவிவளர்த்த திருப்புகழான்
கவின வோங்கும்
அலைவளைத்த புவிமன்னர் தலைவளைத்த விருங்கழலா
னழகாய் நீண்ட
மலைவளைத்த தடம்புயத்தான் மதிவளர்த்த மிதிலைமகள்
மயங்கா தன்று
சிலைவளைத்த மணமுடித்த சீராஜ ராஜனனி
சிறக்க மாதோ. (39)

மாமலி சேங்கேழ்க் கோமணி யுமிழும்
நுரைத்திரை யுடுத்த தரைத்தட வரைப்பில்
தாவாப் பவப்பிணி மூவா தொழித்து
மோவா வின்ப முறுதலை விரும்பியும்
நலனுறு தீர்த்தப் பலன்பெறல் வேண்டிச்
சிற்சில காவதம் பற்பல வாண்டு
வன்கால் நலிய நன்முயற் கோடு
விரும்பினர் போல வெதும்பி யுழன்மீர்
சின்னாள் வாழ்வை யுன்னா தலைந்தே
பன்னெறிச் செல்லும் புன்னெறி யொழியின்
முற்பவத் தொடரூந் தற்பிணி மாசு
மொருங்கே கழுவு மிரும்புனற் கோடி
யீண்டே யிருக்க வாண்டே னலைவீர்
உள்ளகத் தன்பொடு பொள்ளென வம்மின்
எனவிளித் திடல்போற் கனகத் தியன்று
மணிகால் யாத்த வணிசால் மாடத்
தும்பர் நாட்டிய தம்ப மீமிசை
புரிக்கிட ரோட்டும் கவிக்கொடி யாலும்
பல்வகை வளனு மல்கிய முகவைத்
துறைபரி பால நறைமலர் மார்ப
குலத்திற் குடியிற் குணத்திற் சிறந்தாய்
இம்மை யம்மை யிருமையு முயிர்க்குச்
செவ்விதின் நல்கிக் கவ்வைதீர்த் தருள்வோய்

திருவுடை மன்னன் திருமா லென்னுந்
தெய்வ வாக்கின் மெய்ந்நல முடைய
பெருமுடி வேந்தரீ யொருவனே யாதி
ஆழிகொள் நீர்த்துளி யன்ன
ஊழிதான் பலவா வாழியூ மானே. (40)

வாழிவைகை யார்முகவை வான்பதியு மன்குடியும்
வாழிமுத்து ராமலிங்க வள்ளலுமே—வாழியரோ
ஊழியங்கா நின்றவுல கெங்கு மொளிரவனே
ஆழியங்கா விக்குடை நன்காய். (41)

நிகரிலாத் தனம்படைத்து நாவலர்க்கும் பாவலர்க்கும்
நிதிபோல் நல்கிப்
புகரிலா மதிபடைத்த தனஞ்சயனே யுதிட்டிரனைப்
போல்வான் செம்பொன்
சிகரிலா வணியமிகு முகவைநகர்ச் சீராஜ
ராஜன் கீர்த்தி
பகரிலார் வியவாதார் நயவாதார் கடல்சூழ்ந்த
பாருள் ளோரே. (42)

பாராளு மதிக்குடைமன் னவர்புகழு முகவையிற்
கார்ப் பருவக் கொண்டற்
சீராரும் புனல்மழைபோ லுலகளிக்குந்
தண்ணளியான் திகழுஞ் செம்பொன்
வாராருங் குவிமுலேயார் வரிவிழியாங்
கருவண்டு மகிழ்ந்து சூழுந்
தாராருந் தடம்புயத்தான் சீராஜ ராஜனனி
தழைக மாதோ. (43)

முற்றும்.

இராமநாதபுரம்,
## சிவஞானம்பிள்ளையவர்கள் பாடியவை.

திருமேவு சைவநெறி செகதல மெலாமுறச்
செய்தற்கு வந்து தித்தோன்
தித்திக்கு நல்லமுதை யொத்தசுவை முத்தமிழ்த்
தெய்வப்ர சங்க மேலோன்
கருமேவு கோள்கள்வந் தடைவுறுப் பெருநலக்
கவினிலகு சீர்த்தி யாளன்
கண்ணியன் பாற்கரன் பண்ணிய தவத்திறுங்
கான்முளை யெனத் தோன்றினோன்
மருமேவு முல்லையந் தாரணியு மார்பினன்
மன்னர்முடி வருடு தாளன்
வண்டமிழ்க் கவிவாணர் வாயார வாழ்த்திட
வயங்குகவி பாடு புலவன்
தருமேவு தொல்புகழ்ச் சீராஜ ராஜதுரை
தாரணியி னீடு வாழத்
தற்பரை யெனத்திகழ் ராஜரா ஜேசுவரி
தாட்கமலம் வாழ்த்து வோமே. (1)

சைவந் தழையத் தமிழகமுந் தமிழ்மா
மறையுந் தழைத்தோங்கத்
தண்ணார் மதியார் வெண்ணீறுந் தனிமா
மணியின் பெருமையையும்
ஐயந்தீர வெம்போல்வார்க் கருளும்
புனிதன் பாற்க ரப்பேர்
அண்ணா னேற்ற தனித்தவத்தி னருமைப்
பயனா யவதரித்து
வையம் பரிமா வூர்ந்துபகை மாற்றி
யிந்த வுலகளிக்கும்
மகிபன் முத்து ராமலிங்க மன்னர்
பெருமான் றனைக்காக்க

வையம் புகழு முகவைநகர் மன்ன
நகமே தன்னகமாய்
மருவி வாழ்ரா ஜேச்வரியின் மலர்த்தாட்
டுணையை வழுத்துதுமே. (2)

வார்கொள் கமல முகைமுலையில் வரும்பா
லுண்ண விரும்புமறை
மழலைக் குழவி தமிழ்பாட வழங்கு
மமுத முலையாளை
ஏர்கொ ளிமையோர் பெரும்பேற்றை யிமவான்
பெற்ற வருமருந்தை
எங்கள் ராஜேச் வரியையெம
திதயத் திருத்தி யிறைஞ்சுதுமால்
பார்கொ ளரசர் முடிகளெலாம் பாதம்
வருடப் பகையின்றிப்
பண்ணைப் பொழிலிற் கொண்மூக்கள் பரவி
யுகுத்த வெண்முத்தைச்
சீர்கொள் பூக முத்தெனவே சிற்றி
லிழைப்பார் கொளுமுகவை
திகழ்வோன் முத்து ராமலிங்க
சேது பதியைப் புரக்கவென்றே. (3)

கண்ணுக் கினியான் புவிக்கினியான்
காட்சிக் கெளியான் கருதலர்க்கும்
கடைவா யடையாப் பெருங்கொடையான்
கவிஞர் திருவை நிகரான
பெண்ணுக் கினிய வனப்புடையான்
பிறைசேர் மௌலிப் பெருமான்றன்
பிரச மலர்த்தா ளனுதினமும்
பேணிப் போற்றுந் தவமுடையான்

பண்ணுக் கினிய பாசுரங்கள்
பரிவாய்ப் பாடுந் தகவுடைய
பண்போன் முத்து ராமலிங்கப் பாராள்
சேது பதிதன்னை
விண்ணுக் கினிய வருமருந்தே வெறியார்
சோலை முகவைநகர்
மேவும் ராஜேச் வரிவிசையை விமலை
விரும்பிக் காப்பாயே. (4)

கங்கைச் சடையிற் பிறைக்கொழுந்துங் கள்ளார்
கொன்றைத் திருத்தொடையுங்
கவின முடித்தெங் கலைக்காக்குங் கண்மூன்
றுடையா னடியவரும்
செங்கைத் தலத்திற் சங்கேந்தித் திருந்த
வுலகைப் புரந்தருளும்
திருவார் பின்னை மணவாளன் செந்தா
மரைத்தாள் துதிப்பாரும்
மங்குற் செறிசோலைகண்மேவு மாட
மதுரை தனில்வளரும்
வளமார் தெய்வத் தென்றமிழும் வயங்கி
யொளிர வவதரித்த
கொங்கிற் பொலிந்து நறவுயிர்க்குங் குலவு
முல்லை மாலையணி
கோமான் ராஜேச் வரனெங்கள் குரிசி
லென்றும் வாழியவே. (5)

உலகின்மனு நெறியதனைத் தன்னெறியிற் காட்டுகின்ற
வுயர்வொப் பில்லான்
குலமுழுதும் பெற்றபுக ழெல்லாந்தன் புழாக்கிக்
கொண்ட கோமான்

நிலவுபொழி குடைநிலவு முகவைமுத்து ராமலிங்க
நிருபன் செங்கோல்
மலர்தலைமா நிலவுலகி னீடூழி தழைத்தோங்கி
வாழ்க மாதோ. (6)

புண்ணியமுந் தண்ணருளும் புந்திமகிழ் வுந்திருவும்
நண்ணுமுத்து ராமலிங்க நாயகற்குக்—கண்ணுதலோன்
பங்காரு மங்கயற்கட் பைங்கொடியே பாரிலென்றுஞ்
செங்கோல் செழிக்கவருள் செய். (7)

கன்னித் தனித்தமிழும் கண்மணியு மைந்தெழுத்தும்
பன்னிப் புகழும் பழமறையும்—முன்னவன்றன்
சீர்பரவு ராஜரா ஜேசுவரன் செங்கோலும்
ஏர்பரவி வாழ்க வினிது. (8)

சமுகம் ஆபீஸ்

## கணபதி சேர்வைகாரர் பாடியவை.

பூரணியே தொண்டர் புனையணியே தேவைநகர்க்
காரணியே நாரணிநீ காத்தருள்பூந்—தாரணியும்
காவலனைப் பானுகுலக் கற்பகத்தை நாவலர்க்கு
நாவலனைப் பூவுலகில் நன்று. (1)

சீர்கொண்ட கொண்டனிகர் பாற்கரப் பேரரசு
செய்தவத் தாலிந்தநாள்
சேதுபதி யாயுலகை நீதிபதி யாகவே
செங்கோ னடாத்து துங்கன்
வார்கொண்ட கொங்கைமட வார்கண்டு மையலுறும்
வதனமதி யன்ன மகிபன்
வளமருவு முகவையினி லொருபரிதி குலமதனுள்
வந்தவ தரித்த வள்ளல்
ஏர்கொண்ட மணிமகுடர் திறைகொண்டு கண்டுகொள
வெதுதருண மென்ற சமுகன்
இயலிசை தெரிந்திடுமி ராஜரா ஜேசுவர
னெம்பிரான் வாழ வருள்வாய்.

கார்கொண்ட குந்தளக் கன்னியம் பிகைநாரி.
கவுரிகங் காளி நீலி.
கயிலாய ரிடமருவு மபிராமி பரையுலவு
கலைவாக ளாத்தி யுமையே. (2)

சேலொத்த நீள்விழிச் சேயிழை யேநின் றிருவருளால்
மாலொத்த மன்னன் மணிமகு டாதிபன் வான்சுரபிப்
பாலொத்த வெண்குடை யான்ராஜ ராஜன் பலகிளைசேர்
ஆலொத்து வாழிய வேகடல் சூழ்ந்த வவனியிலே. (3)

பூவலயந் தாங்கும் புயபூ தரன்சேது
காவலவன் வாழக் கனிந்தருள்வாய்—பாவலர்க்குச்
சங்கநிதி யன்னவனை சங்கரியே யென்கவியை
மங்களமா யேற்று மகிழ்ந்து. (4)

மந்தார மன்னகைப் பாற்கர ராஜன் வரந்திகழும்
சிந்தா மணியனை யான்ராஜ ராஜமன் சிந்துரமுன்
வந்தா தரித்தவன் நீடூழி வாழ்ந்து வளம்பெறச்செய்
கொந்தார் குழல்வடி வேவனை சங்கரிக் கோமளமே. (5)

வாடும் பயிர்க்குநன் மாரியொப் பானவன் வண்புலவோர்
தேடும் புகழுடை யான்ராஜ ராஜனும் செம்பிவள
நாடுஞ் செழித்து மகிழ்வோங்க வேயருள் நாவலர்தாங்
கூடும் முகவையின் தென்பா லுவந்தருள் கோமளமே. (6)

கடிகொண்ட பூம்பொழில் சூழ்முக வாபுரிக் காவலரைக்
குடிகொண்ட வங்கயற் கண்ணுமு தேநின் . குரைகழலை
முடிகொண்ட சென்னியன் சீராஜ ராஜ முகில்வளஞ்சேர்
படிகொண்டு நீடரு ளால்வாழி வாழிவண் பாரியென்றே. (7)

வானம் மழைபொழிய வையகமெல் லாஞ்செழிக்கத்
தானந் தருமந் தழைத்தோங்க—தேனமர்தார்ச்
சேதுபதி யாமுகவைச் சீராஜ ராஜனுக்கா.
மாதுவனை சங்கரியும் மா. (8)

நீதிதரு கற்பகமே நீணிலத்தில் வந்ததெனச்
சேதுபதி யாகவந்த தேர்வேந்தே—ஓதுவன
சங்கரியின் பேரருளாற் சண்முகனைப் போலவளர்க்
திங்கரசு செய்க இனிது. (9)

உலக முழுது மொருகுடைக்கீழ் வாழ
அலகி லொளிபரப்பு மண்ணல்—திலகநுதற்
சீராஜ ராஜ சிகாமணியைக் காத்தருள்வாய்
நாரா யணியுமையே நன்கு. (10)

தேனுடு முல்லைத் தெரியலாய் தென்முகவைக்
கோனுக வந்தகுணக் குன்றேநீ—வானுரும்
ஓராழித் தேரவனும் ஒண்மதியு முள்ளமட்டும்
காராழி வையகத்தைக் கா. (11)

பைங்காவி யார்வயற் செம்பிநன் னாட்டைப் பரிந்தளிக்குஞ்
செங்காவி யங்குடைச் சீராஜ ராஜ சிகாமணிவெண்
சங்காழி கைக்கொண்ட மாயவ னேயெனச் சந்ததமும்
பொங்காழி வையகத் தேயுனக் கேவளம் பொங்குகவே. (12)

இராமநாதபுரம்

## விஜயன்சேர்வைகாரர் இயற்றியவை.

பூமணைக்குந் திருமணக்கும் புலமணக்குந் திருமுகவா புரியையாளும்
புரவலர்கள் புரிதவத்தின் பொருளெனவந் தவதரித்த புனிதனுகி
நாமணக்கும் புலவர்கவி நயமணக்கும் புயவரைமேல் நறியகந்த
நனிமணக்கும் புவிமுழுது நலனுறவைத் திலகுபுகழ் ராஜராஜன்
தேமணக்கு முல்லையணி பாற்கரனும் பலகலைதேர் செம்மலீந்த
செயகுமர னயமிகுசொல் வகைதெரியு மகிபனவன் சிறந்துவாழக்
கூமணக்கு மகபதியா தியபுலவர் முடிமணந்து கவினுஞ் செங்கோ
கனகமலர்ப் பதயுகள ராஜரா ஜேச்வரிநீ கருது வாயே. (1)

எல்லா விலக்கண முந்தெரிந் தோரறிந் தின்பமுறுஞ்
சொல்லா லியன்ற கவிமாலை யாமளை சுந்தரிநின்

நல்லா ரணைக்கொழுக் தாண்மீது நாளு நயக்கலியா
வல்லா னுயர்புகழ்ச் சிராஜ ராஜனை வாழ்விக்கவே. (2)

பூதலமு மீதலமும் பொருந்துபல தலமுமிசை புகலுஞ் செந்நாப்
போதனெனும் பாற்கரவே டவப்பலனம் புவிக்கிதமே புகுத வாய்ந்த
காதலனெஞ் சேதுபதி ராசரா சேசனகங் களித்து வாழக்
காதலுட னருள்புரிதி திரிபுரசுந் தரியுமைசீர் கருது மாதே. (3)

பூவலயந் தாங்கும் புயபூ தரன்மகவான்
காவியந்து நாளுகொடைக் கையினான்—மாவுவந்து
தங்குமுத்து ராமலிங்கத் தார்வேந்த னீண்முகவைத்
துங்கனிதம் வாழிநிலைத் து. (4)

கல்விக் கிருவரம்புங் கண்டமுத்து ராமலிங்கச்
செல்வ னரசு செழித்தோங்கப்—பல்வளமுஞ்
சேர்முகவை ராஜரா ஜேச்வரியே யம்பிகையே
பார்வதியே நீயருட்கண் பார். (5)

---

இராமநாதபுரம்

## சோமசுந்தரம் பிள்ளையவர்கள் பாடியது.

சேதுபதி வாழிநலஞ் சேர்சீர் மனைவியருங்
காதலிக்கு மைந்தர் கனிட்டருடன்—ஆதரவாம்
மாதருவும் வாழி வளங்கண் மிகவோங்கி
மாதலத்தோர் வாழி மகிழ்ந்து.

---

இராமநாதபுரம்

## K. சுப்பிரமணிய ஐயரவர்கள் பாடியவை.

வெண்பா.

சீராருந் தென்முகவைச் சிராஜ ராஜேசன்
தாராரும் பொற்புயத்தான் றண்ணளியான்—போரார்
பரராஜ கேசரியைப் பாலிப்பா யெங்கள்
வரராஜ ராஜேச் வரி. (1)

நல்குகொடைச் சீராம நாதனிட நாரணியே
மல்குபுகழ்ச் சீராஜ ராஜமன்னன்—தொல்குலந்தான்
வாழையடி வாழையென வாழ்வருளிப் பாலிப்பாய்
ஏழையடி யேன்சொற் கிசைந்து. (2)

கட்டளைக் கலித்துறை.

நோயற்ற மெய்யுங் குறைவற்ற செல்வமு நூற்றுக்குமே
லாயுற்ற வாயுளு மம்புவி யாட்சியு மாக்கியருள்
நீயுற்ற சேயெனச் சீராஜ ராஜ நிருபனைநற்
றாயுற்ற வன்பினுஞ் சாலப் பரிந்த தயாநிதியே. (3)

நாலுங் கடைமணி நாவசை யாமையின் ஞாலமுழு
தாளும் புரவலன் சீராஜ ராஜமன் னங்கையிற்செங்
கோலுங் குறிக்கொண்டு கோடாத செம்மைக் குணாகரனை
நாளுஞ் சிறக்க வருள்வாய் சிவானந்த நாரணியே. (4)

முத்தமிழ் முந்நீர் முளைத்தெழு மோர்முத்து ராமலிங்க
வித்தக பானு விவேகக் கதிரா லிருள்விலக்கி
உத்தம விற்பன ருள்ள மலர்த்தி யொளிசிறந்து
நித்தமு மோங்கி நிலைபெற்று வாழ்கவிந் நீணிலத்தே. (5)

பாடும் புலவர் பசிப்பிணி பாறப் பரிசளித்துப்
பீடும் புகழும் பெறவே நினைந்து பெரும்பொருளைத்
தேடும் புரவலன் சீராஜ ராஜநற் சேதுபதி
நாடுஞ் செழித்து நலம்பெற்று வாழ்கவிந் நானிலத்தே. (6)

அற்பரைப் பாடி யவமே யலைந்த வரும்புலவீர்
விற்பன மேருநற் கற்பக தாருவல் விற்படையான்
மற்புய மன்னவன் சேணுயர் வண்கந்த மாதனமால்
வெற்பனைச் சீராஜ ராஜனைப் பாடி விரைந்துய்மினே. (7)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பூதரமென் றேயுரைக்கும் பொற்புயத்தா யிவ்வுலகிற்
புலவ ரெல்லாம்
நீதருவென் றேநினைந்து நின்னையடுத் தெப்பொருளு
நேர்ப் பெற்றார்
ஆதரவென் றேயடைந்த யாவரையு மஞ்சலெனு
வருளு மாற்றாற்
சீதாளீ சீதரன்றன் சோதரியின் றிருவருளாற்
சிறக்க மாதோ. (8)

திருச்செந்தூர் அஷ்டாவதானி
கட்டியம்-மகாதேவ ஐயர் பாடியவை.

---

பொன்னார் தடத்தஞ் சிறையெகினப்
புளினஞ் சேர விளையாடிப்
பொங்கம் புயமே வரியிற் குடைந்தப்
போதச் சிறைகள் புலர்த்திபிட
மின்னுள் வெயிலிற் பொழிற்புறத்தீத
வீசுந் தென்றன் முகந்தமணம்
வீதி மணக்கும் வேதியர்கள்
வேள்வி மணக்கு முகவையிறை
கன்னி ரியர்கண் மதனென்முத்து
ராம லிங்கத் துரைபரவ
கவராத் திரியிற் கொலுவிருக்கு
நகைசேர் முகத்து நாரணியே
என்று மகமே யுலகெவைக்கு
மிராஜ ராஜேச் வரித்தாயே
இதயங் களிக்க வரசனுக்கு
னினிய தயைசெய் யெழில் விளக்கே. (1)

அரியமலை யுறையெயினர் தந்திவெண் கோட்டுமணி
யாரங் கொணர்ந்து வைக்க
வம்பரத் துள்ளவர்கண் மந்தார மலர்களுந
தடிமலர்க ளிற்சொரியவே
பிரியமுறு கவியறிஞர் நாலுகவி யந்தெரியல்
பேணியணி யச்சிவிகையும்
பிறவுளவு மணிமுத்து ராமலிங் கேந்திரன்
பேரன்பு கந்துதரவே
உரியதின தணிமுகவை வேதியர்கண் மறைபுகல
வோங்குதுந் துபியொலிக்க
யுள்ளங்க ளிக்கவிரு தங்கமொடு வீணைகளு
மோசைதர வீற்றிருந்தே
கரியமலை நிகர்நிருதர் தமைவென்ற சூலியருள்
கனிராஜ ராஜேச்வரீ
கண்கள்பொழி கருணையா லிந்நகர மன்னனைக்
காத்தருள்வை காத்தருள்வையே. (2)

சொல்லார்ந்த சீர்ப்புயப் பாற்கர மன்னவன் றோன்றன்மணி
நல்லா மதன்முத்து ராமலிங் கத்துரை ராஜனுக்கு
மல்லார் பகிட்டினை வென்றிடுஞ் சூலி மறைப்பொருளே
எல்லா வரமுங் கொடுத்தருள் வாய்நன் கிரக்கம் வைத்தே.

## துரைசாமி ஐயர் அவர்கள் இயற்றியது.

பூந்தா ரணிமார்பன் போதன்முன் பூவெனலால்
ஆந்தா ரணிதாங் கணிப்புயத்தான்—போந்தாருக்
கின்பளிக்கு மாராச ராசவேள் இன்னுயிர்கட்
கன்பளித்து வாழ்கபல் லாண்டு.

## பாண்டவமங்கலம்

## மு. சங்கரநாராயண பாரதிகள் பாடியது.

---

புண்ணியம் புரிந்த புலவருக் காகப் புவியினிற் பலவுருப் புனைந்து
கண்ணியகுமரி களினநா யகன்மால் நாடோறுந் தொழுங்கயற்கண்ணி
எண்ணிய முத்து ராமலிங் கேந்த்ர னெழிற்பதி மரபொடுந் தழைத்துக்
கண்ணியம் பொருந்திக் கோன்முறை யோங்கக் காவல்செய் தருள்புரி வாயே.

## செம்பொன்குடி

## தக்ஷிணாமூர்த்தி சிவாசாரியர் பாடியவை.

மஞ்சளையு மிஞ்சி மணிமாடத் தென்முகவை
வஞ்சியர்கள் செவ்வி மடல்வரையும்—பொன்செறிந்த
மார்பா வயமுத்து ராமலிங்க மன்னவநின்
சீர்பாடு வாம்புவிமீ தே. (1)

மாவாருந் தென்முகவை மன்னர்மர பைக்காக்கும்
தேவான தாயே திரிபுரையே—பாவாரும்
பாற்கரனார் தந்தசய பாலன்முத்து ராமலிங்கச்
சீர்க்கரன் வாழவருள் செய். (2)

மங்களஞ்சேர் சேதுபதி மாளிகையில் வந்திருக்கு
மெங்க ளிராஜரா ஜேச்வரியே—சங்கநிதி
யன்னமுத்து ராமலிங்க வண்ணற் கினிதருள்க (3)
மன்னுஞ் சுபநிறைந்த வாழ்வு.

வேம்பத்தூர்க்

கோவிந்தஐயரவர்கள் பாடியவை.

---

பூமேவு சந்திர சடாதரி மனோகரி
புயல்வண்ண மாலசோதரி
புரந்தரி துரந்தரி நிரந்தரி குமாரிதிரி
புரசவுந் தரியுதாரி
தேமேவு ஜெயகரி சுபாகரி தயாகரி
ஸ்ரீராஜ ராஜேச்வரி
திகழுநின் றிருவடிக் கன்புவைத் துத்தொழுஞ்
சிந்தையுந் தேனின்மிக்க
பாமேவு செந்தமிழ்ப் பயிர்தனை வளர்த்திடும்
பான்மையு மிசைமேன்மையும்
பாருயிரனைத்தினுங் கருணையு மீகையும்
பரவுமனுநீதி முறையும்
நாமேவு மின்சொலும்பெற்றுமகிழ் முகவைமன்
னன்முத்து ராமலிங்க
ராஜராஜேந்திரன் செங்கோ றழைக்கவெந்
நாளுநீ யருள்செய்வையே.

வெண்பா

இப்பார்வாள் போற்று மிராஜரா ஜேச்வரியா
மம்பிகையே யன்பா யருள்செய்வாய்—செம்புலவோர்க்
கிச்செதன் றுங் காக்கு மெழின்முத்து ராமலிங்க
வேந்தன்செங் கோறழைக்க வே. (2)

புவியரசர் கப்பமிட்டுப் போற்றிநிற்பக் காவிக்
கவிகைநிழல் வீற்றரசாங் கஞ்செய்—திவியவெழிற்
பூமான் முகவா புரிமுத்து ராமலிங்கச்
சீமானை நாளுஞ் செயம். (3)

## சேதுசம்ஸ்தானம் பரிதாபி௵
## மஹாநவராத்திரி வாழ்த்துக்கவிகள்.

வானுறையுஞ் சிந்தா மணியையுமி லக்காம
தேனுவைவென் றிட்ட செழுங்கொடையாற்—பானுவென
மன்னவனி மீதில் வளர்முத்து ராமலிங்க
மன்னவ நின்கைத்தா மரை. (4

மன்னுலகிற் றோன்றுவன மற்றதுவா குந்திரமா
நண்ணுவது யாதெனவே நன்குணர்ந்து—திண்ணமுடன்
நாட்டும் புகழ்முத்து ராமலிங்க பூபதியே
நாட்டுட் சிறந்திடுமன் னன். (5)

ஓரியூர்ச்

### சர்க்கரைப்புலவர் அவர்கள் பாடியது.

பூரணி மனோன்மணி முகவைவா ழீசுவரி புண்ணியர்க ளிதயாசனி
புரந்தரி கவுமாரி ராஜரா ஜேசுவரி பொற்கமல வடிபரசுவாந்
தாரணி நரேந்திரர்க டிறைகொண்டு வந்துபணி தானகன் றவ தாரன்
சத்ரபதி நீதிபதி பாற்கரச் சேதுபதி தீவப்த்ர குணசாந்தமா
மேலரணி புயாசலன் ராஜரா ஜேசுவர னிரத்னமணி முடி சூடியே
யெண்டிசையொடுலகெலாந் திகிரிசெலவோர்குடையிருந்தரசுபுரியநாளுஞ்
சீரணியு மார்க்கண்டன் வயதுமிரு நிதியமுந் தேர்ச்சிபெறு கலைஞானமுஞ்
சீர்த்தியுஞ் சந்ததி விருத்தியுஞ் செல்வமும் செங்கோலும் வாழ்கவென்றே.



முற்றிற்று.

